# மின்னூல் வெளியீடு

மின்னூல் வெளியீட்டாளர்: http://freetamilebooks.com

அட்டைப்படம்: லெனின் குருசாமி - guru-leninn@gmail.com

மின்னூலாக்கம்: லெனின் குருசாமி - guru-leninn@gmail.com

மின்னூலாக்க செயற்திட்டம்: கணியம் அறக்கட்டளை - kaniyam.com/foundation

# Ebook Publication

Ebook Publisher: http://freetamilebooks.com

Cover Image: Lenin Gurusamy - guruleninn@gmail.com

Ebook Creation: Lenin Gurusamy - guruleninn@gmail.com

Ebook Project: Kaniyam Foundation - kaniyam.com/foundation

# பொருளடக்கம்

# 1. புலியும் எலியும்

-உதயசங்கர்

-மே 12, 2019

புல்லூர் காட்டில் உலகத்திலுள்ள எல்லாவித விலங்குகளும், எல்லாவித பறவைகளும், எல்லாவித புழுபூச்சிகளும் வாழ்ந்து வந்தன. அதாவது சிங்கம், புலி, காண்டாமிருகம், கழுதைப்புலி, சிறுத்தை, சிவிங்கிப்புலி, ஓநாய், செந்நாய், நரி, குள்ளநரி, காட்டெருமை, ஒட்டகச்சிவிங்கி, புள்ளிமான், கடமான், வரையாடு, கேழை மான், வரிக்குதிரை, மிளா, கீரி, காட்டு அணில், காட்டு எலி, வெள்ளெலி, முள்ளெலி, மூஞ்சுறு, முள்ளம்பன்றி, சுண்டெலி,

பெருச்சாளி, மலைப்பாம்பு, ராஜநாகம், நாகப்பாம்பு, சாரைப்பாம்பு, கொம்பேறிமூக்கன், கட்டுவிரியன், கண்ணாடி விரியன், மஞ்சள் விரியன், காட்டுக்கோழி, மயில், புள்ளிக்குயில், கருங்குயில், மைனா, அண்டங்காக்கா, சாம்பல் காக்கா, சிட்டுக்குருவி, தவிட்டுக்குருவி, கரிச்சான்குருவி, தூக்கணாங்குருவி, ஆந்தை, கூகை, பனங்காடை, மரங்கொத்தி, சிவப்புக்கொண்டைக்குருவி, காடை, கௌதாரி, அன்றில், தேன்சிட்டு, தையல்சிட்டு, ஊதாச்சிட்டு, பூரான், சேடான், செந்தேள், கருந்தேள், நட்டுவாக்காலி, மண்புழு, மரவட்டை, நத்தை, அட்டைப்பூச்சி, வண்ணத்துப்பூச்சி, பட்டாம்பூச்சி, தட்டான், தங்கத்தட்டான், பச்சைத்தட்டான், மரப்பல்லி, ஓணான், சில்லான், பச்சோந்தி, பொரிவண்டு, பீஉருட்டிவண்டு, சில்வண்டு, பொன்வண்டு, பழந்தின்னிவௌவால், என்று எல்லா உயிரினங்களும் வாழ்ந்தன.

அங்கே ஒரே ஒரு வயதான சிங்கம் இருந்தது. அதுதான் புல்லூர் காட்டுக்கு ராஜா. ஏதோ கெட்டுப்போன உணவைச் சாப்பிட்டு சிங்கம் நோயில் விழுந்தது. சில நாட்களில் அது இறந்து விட்டது. உடனே அந்தக் காட்டிலுள்ள எல்லா விலங்குகளும் சேர்ந்து தங்களுடைய தலைவரைத் தேர்ந்தெடுக்கக் காட்டில் இருந்த பெரிய ஆலமரத்தடியில் கூடினர். புல்லூர் காட்டு மந்திரிசபையின் மூத்த அமைச்சர் கொம்பன் ஆந்தையார் தூங்கி வழிந்து கொண்டிருந்தார். அவர் தான் பகல் தூக்கக்காரரர் ஆயிற்றே. உடனே அண்டங்காகம் ஆந்தையாரின் இடுப்பில் ஒரு கொத்து கொத்தினார். உடனே திடுக்கிட்டு விழித்த ஆந்தையார்,

” அதாவது நமது காட்டில் இப்போது சிங்கம் இல்லாதாதால் யாரை வேண்டுமானாலும் தலைவராகத் தேர்ந்தெடுக்கலாம். ஐந்து

வருடங்களுக்கு ஒருமுறை போட்டி நடக்கும். யார் தலைவர் பதவிக்குப் போட்டியிடப் போகிறீர்களோ அவர்கள் எழுந்து தங்கள் பெயரைப் பதிவு செய்து கொள்ளலாம்…”

என்று கரகரத்த குரலில் கத்தியது. அவ்வளவு தான் எல்லோரும் ஒரே நேரத்தில் நான் தலைவருக்குப் போட்டியிடுகிறேன். நான் தலைவருக்குப் போட்டியிடுகிறேன்.. நான் தலைவருக்குப் போட்டியிடுகிறேன் என்று முண்டியடித்தன. பறவைகளில் வல்லூறு முதல் சிட்டுக்குருவி வரை பூச்சிகளில் சேடான் முதல் பீயுருட்டி வண்டு வரை, ஊர்வனவற்றில் ராஜநாகம் முதல் மண்ணுளிப்பாம்பு வரை, விலங்குகளில் மான் முதல் சுண்டெலி வரை போட்டிக்குத் தயார் என்று பெயர் கொடுத்தார்கள். அப்போது புலி எழுந்து தன்னுடைய உரத்த குரலில்

“நான் போட்டியிடப் போகிறேன்…” என்று உறுமியது. அவ்வளவு தான். எல்லோரும் கப்சிப்பென்று ஆகிவிட்டார்கள். அப்படியே பத்தடி தூரம் பின்னால்போய் நின்று விட்டார்கள். புலிக்கு வழி எளிதாகக் கிடைத்துவிட்டது. அது ஆந்தையாருக்கு முன்னால் போய் நின்றது. என்ன இது? எல்லோரும் பின்னால் போய்விட்டாலும் ஒரு சுண்டெலி மட்டும் ஆந்தையாருக்கு அருகில் நின்று கொண்டிருந்தது. புலிக்குக்கோபம். என்ன தைரியம்! ஆந்தையாருக்கு சுண்டெலி அதன் அருகில் நின்று கொண்டிருந்தது தெரியவில்லை. ஆந்தையாரே பயந்து நடுங்கிக் கொண்டிருந்தது.

“புலியாருடன் போட்டி போட யாரும் இல்லையா?” என்று கேட்டது. அருகில் இருந்த சுண்டெலி,

“நான் நிக்கறது உன் முட்டைக்கண்ணுக்குத்

தெரியலையா ஆந்தைத்தடியா?”

என்று கீச்சிட்டது. ஆந்தையாருக்குக் கோபம் பொங்கி வந்தது. மற்ற நேரமாக இருந்தால் ஒரே விழுங்கில் சுண்டெலி போன இடம் தெரியாது. இப்போது தேர்தல் நேரம். எதுவும் செய்ய முடியாது. உடனே,

“நல்லா யோசிச்சிச் சொல்லு.. நீயா போட்டி போடப்போறே..”

என்று சிரித்தது. ஆந்தையார் சிரித்ததும் அங்கே கூடியிருந்த அத்தனை விலங்குகள், பறவைகள், பூச்சிகள், எல்லாம் கெக்க்கேக்க்கே என்று சிரித்தன. புலியும் சிரித்தது. சுண்டெலிக்குக் கோபம் வந்தது. உடனே ஆந்தையாரின் தலைமீது ஏறி நின்று கொண்டு,

“நண்பர்களே! புலியோ, நரியோ, பூங்குருவியோ, கழுகோ, பாம்போ, பல்லியோ,

போட்டி என்றால் போட்டி தான். எளியோரை ஏளனம் செய்யாதீர்கள்..” என்று முழங்கியது. எல்லோரும் அமைதியானார்கள். புலி அலட்சியமாகப் பார்த்தது.

“சரி சரி நமது முன்னோர்கள் சொன்ன போட்டி இது. இதோ இந்த அல்லிக்குளத்திலிருந்து புறப்பட்டு நமது புல்லூர் காட்டு எல்லையிலுள்ள அல்லிக்குளத்தை யார் முதலில் சென்று தொட்டு விட்டு வருகிறார்களோ அவர்களே நமது தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படுவார்...”

உடனே போட்டியின் நடுவர் ஒரு சீம்புல் கற்றையை எடுத்து தரையில் கோடு போட்டார். அந்தக் கோட்டில் புலியும் சுண்டெலியும் நின்றன. குயில் புங்கைமரக்கிளையில் உட்கார்ந்து கொண்டு,

“குக்க்கூகுக்க்க்கூகூ..” என்று விசில்

ஊதியது. உடனே புலியும் சுண்டெலியும் பாய்ந்து ஓடின. நான்கு கால் பாய்ச்சலில் பாய்ந்து சென்றது புலி. கொஞ்சதூரம் போனதும் ஓடிக்கொண்டே திரும்பிப்பார்த்தது. சுண்டெலியைக் காணவில்லை. இத்துணூண்டு சுண்டெலி எப்படி ஓட முடியும்? வெற்றி எனக்கே. என்று நினைத்தபடி வேகமாக ஓடியது.

புல்லூர் காட்டின் எல்லையில் இருந்த அல்லிக்குளத்தைத் தொட்டுவிட்டுத் திரும்பிய புலி அதிர்ச்சி அடைந்தது. பார்த்தால் ஆந்தையார் சுண்டெலிக்கு வெற்றிமாலையைச் சூடிக்கொண்டிருந்தது. ஓடிப்போய் தலைகுப்புற விழுந்த புலி "எப்படி? இது எப்படி? எல்லோரும் சேர்ந்து என்னை ஏமாற்றுகிறீர்களா?"

ஆந்தையார், "புலியாரே அமைதி! அமைதி! நீங்கள் தரைக்கு மேல் ஓடினீர்கள். சுண்டெலியார்

தரைக்குக்கீழ் ஓடிச் சென்று வெற்றி பெற்று விட்டார்... இனி அவர் தான் இந்தப்புல்லூர் காட்டின் தலைவர்...இது நம்முடைய குலதெய்வமான இயற்கையன்னையின் ஆணை..”

விலங்குகள், பறவைகள், பூச்சிகள், எல்லோரும் சுண்டெலியின் வெற்றியைக் கொண்டாடினார்கள். சுண்டெலியை ஆளாளுக்குத் தலையில் வைத்துக்கொண்டு ஆடினார்கள்.

மறுநாள் சுண்டெலி காட்டில் உள்ள அனைத்து உயிரினங்களையும் அழைத்தது.

“நண்பர்களே! எனக்கு அலுவல்கள் அதிகமாக இருப்பதால் உணவு தேடிச் செல்ல முடியவில்லை. எனவே தினம் மூன்று வேளையும் உணவை நீங்கள் வரிசையாகக் கொண்டுவந்து தரவேண்டும்...”

அப்புறம் என்ன? எல்லா விலங்குகளும் பறவைகளும் பூச்சிகளும் சுண்டெலியின்

வளைக்கு முன்னால் வரிசையில் நின்று புல், பூண்டு, அரிசி, கம்பு, கேப்பை, குதிரைவாலி, சோளம், பழங்கள், காய்கறிகள் என்று ஏராளமாய் கொண்டு வந்து கொடுத்தன. உழைக்காமல் ஓசியில் கிடைத்த சாப்பாட்டை வயிறு முட்டத்தின்ற சுண்டெலி என்ன ஆனது தெரியுமா?

பெருச்சாளி ஆகிவிட்டது. அதனால் அசையக்கூட முடியவில்லை. காட்டில் உள்ள எல்லோருக்கும் அலுத்து விட்டது. அவர்களுக்கு உணவு தேடுவதே பெரும்பாடு. இதில் சுண்டெலிக்கும் சேர்த்து உணவு தேடவேண்டும் என்றால் எரிச்சல் வரத்தானே செய்யும்! எப்போது ஐந்து வருடம் முடியும் என்று காத்திருந்தார்கள்.

அந்த நாளும் வந்தது. போட்டி நடக்கும் நாளில் மறுபடியும் புலி போட்டி போட்டது. சுண்டெலியால் நடக்கக்கூட முடியவில்லை.

ஆனாலும் கவுரவத்துக்காகப் போட்டியில் நின்றது. குயில் கூவியதும் புலி பாய்ந்து சென்றது. ஆனால் சுண்டெலியால் பத்தடி தூரம் கூட நடக்கமுடியவில்லை. அந்தப் போட்டியில் புலி தான் வெற்றி பெற்றது என்று சொல்லணுமா என்ன?

மறுநாள் புல்லூர் காட்டின் விலங்குகள், பறவைகள், பூச்சிகள், எல்லோரையும் தன்னுடைய குகைக்கு முன்னால் வரும்படி ஆணை இட்டது.

“எனக்கு அரசு அலுவல்கள் அதிகம் இருப்பதால் இன்று முதல் மூன்று வேளையும் உங்களில் யாராவது ஒருவர் எனக்கு உணவாக வந்து சேர வேண்டும். இல்லை என்றால் அவர்களுடைய குடும்பத்தையே அழித்து விடுவேன்....”

என்று உறுமியது. அத்தனை விலங்குகளும்

பறவைகளும் பூச்சிகளும் நடுங்கி விட்டன. புலிக்கு எலியே பரவாயில்லை என்று நினைத்தன. தினம் ஒவ்வொரு இனத்திலிருந்தும் ஒரு விலங்கு, ஒரு பறவை, ஒரு பூச்சி என்று புலியின் குகைக்குள் போயின. யாரும் திரும்பி வரவில்லை. எல்லா விலங்குகளின் எண்ணிக்கையும் காட்டில் குறைந்து கொண்டே வந்தது.

ஒரு நாள் ஒரு புள்ளிமானின் முறை. அதற்கு இரண்டு நாட்களுக்கு முன்னால் தான் ஒரு குட்டி பிறந்திருந்தது. அது புலிக்கு இரையாகி விட்டால் குட்டிக்கு யார் பால் கொடுப்பது? அது பசியில் அழுதே இறந்து விடுமே என்று நினைத்தது. அதனால் குட்டியையும் சேர்த்தே கூட்டிக்கொண்டு போய் விடலாம் என்று முடிவு செய்தது. அதனுடைய நிலைமையைக் கண்டு மற்ற மிருகங்கள், பறவைகள், பூச்சிகள், எல்லோரும் பரிதாபப்பட்டனர். உச்சுக் கொட்டினர். எதுவும்

அறியாத மான்குட்டி விளையாடிக்கொண்டிருந்தது.

செவலைக்கருப்பு நிறமுள்ள ஒரு முயல் யோசித்தது. அது செங்கரடியின் காதில் ரகசியம் பேசியது. செங்கரடி ஓநாயிடம் சொன்னது. ஓநாய் வல்லூறுவிடம் சொன்னது. வல்லூறு பொரிவண்டிடம் சொன்னது. பொரிவண்டு சில்வண்டிடம் சொன்னது. சில்வண்டு காட்டிலுள்ள அத்தனை மிருகங்கள், பறவைகள், பூச்சிகளிடம் சொன்னது. உடனே எல்லோரும் புள்ளிமானை முன்னால் விட்டு, பின் தொடர்ந்து போனார்கள்.

புலிக்குகை வாசலில் நின்று மான்,

“நான் வந்திருக்கேன்.. தலைவரே.” என்று கத்தியது. உறங்கிக் கொண்டிருந்த புலி மெல்ல எழுந்து வாசலுக்கு வந்தது. பார்த்தால் வாசலில் சிங்கம் நின்று கொண்டிருந்தது.

“இயற்கையன்னையின் சட்டத்தை

மதிக்காமல் எல்லோரையும் அநியாயமாய் தின்று தீர்க்கும் உன்னை இதோ இப்போதே விழுங்கப்போகிறேன்...” என்று கர்ச்சித்தது. பின்னாலிருந்து அனைத்து விலங்குகளும், பறவைகளும், பூச்சிகளும் ஓ வென கத்தின.

“கொல்லுங்க.. புலியைக் கொல்லுங்க..”

அந்தக் குரலைக் கேட்டதும் புலி குகையை விட்டு தலைதெறிக்க ஓடியது. புலி ஓடியதும் சிங்கம் அந்தக் காடே அதிரும்படி கர்ச்சித்தது. ஆனால் அது செங்கரடியின் குரலாக இருந்தது. முயலும், புள்ளிமானும், புள்ளிமான்குட்டியும் கூட்டத்திலிருந்து வந்தன. அப்போது குயில்,

“செங்கரடியாரே நீங்களே தலைவராக இருந்துருங்க..” என்று கூவியது. அதைக்கேட்ட செங்கரடி,

“இல்லை.. இல்லை.. நாம் யாருமே

தலைவர்கள் இல்லை. இயற்கையன்னை தான் நமக்கு எல்லாம் தலைவி.. அவளுடைய சட்டங்களின்படி வாழ்ந்தால் போதும்.. யாருக்கும் எந்தத் துன்பமும் வராது..” என்றது. உடனே எல்லோரும், “இயற்கையன்னை வாழ்க! இயற்கையன்னை வாழ்க!” என்று முழங்கினர்.

# 2. எலி ராஜ்ஜியம்

-ஜூன் 9, 2019

-உதயசங்கர்

கோவூர் நாட்டு மக்களுக்கு என்ன செய்வது என்றே தெரியவில்லை. இதோ மறுபடியும் தேர்தல் வந்து விட்டது. இதுவரை கோவூர் நாட்டை திம்மன் ஆண்டு கொண்டிருந்தான். திம்மனின் ஆட்சியில் மக்கள் ஒரு நாளும் நிம்மதியாகத் தூங்கியதே இல்லை. திடீர் திடீரென்று நள்ளிரவில் தொலைக்காட்சியில் தோன்றி முழங்குவான். மக்கள் தொலைக்காட்சியை அணைத்து வைத்திருந்தாலும் எல்லாத் தொலைக்காட்சிகளின் மெயின் ஸ்விட்ச்

திம்மனின் அரண்மனையில் இருந்தது. அதனால் திம்மனால் எப்போது வேண்டுமானாலும் தொலைக்காட்சியில் தோன்ற முடியும். திம்மன் பகல் முழுவதும் தூங்குவான். இல்லை என்றால் ஊர் ஊராகச் சுற்றுவான். இரவில் தான் அவனுடைய மந்திரிசபையைக் கூட்டுவான். உடனே மந்திரிகள் மக்களிடம் எப்படி எல்லாம் வரி வசூல் செய்யலாம். மக்கள் மத்தியில் எப்படி எல்லாம் சண்டை மூட்டி விடலாம் என்று ஆலோசனை சொல்லுவார்கள். அடுத்த நிமிடம் திம்மன் தொலைக்காட்சியில் தோன்றி, “கோவூர் நாட்டின் குலதெய்வமான நம்முடைய எலிக்கடவுள் நேற்று என் கனவில் வந்தார். எல்லோரும் எலிகளை விரட்டுகிறார்கள். சிலர் எலிகளைக் கொன்று விடுகிறார்கள். அதனால் நாட்டுக்கு மிகப்பெரும் கேடு வரப்போகிறது. அதனால் இனிமேல் எலிகளைப் பராமரிக்க, காப்பற்ற,

உங்களுடைய ஒருவேளை உணவைத் தியாகம் செய்யுங்கள். அந்த ஒரு வேளை உணவுக்கான பணத்தை என்னுடைய கஜானாவில் தினமும் கொண்டு வந்து கொடுங்கள். இல்லையில்லை நமது நிதித்துறை ஊழியர்களே உங்கள் வீட்டிற்கு வந்து வாங்கிக்கொள்வார்கள். எலிக்கடவுளுக்காக இதை நீங்கள் செய்ய வேண்டும். எலிகளை விரட்டினாலோ, எலிகளைக் கொன்றாலோ அவர்கள் தேசத்துரோகிகள் என்று கருதப்படுவார்கள். நம்முடைய நாட்டுக்காக உங்களுடைய தாய் நாட்டுக்காக இதைக்கூடச்செய்யக்கூடாதா? நமக்கு எலிப்பற்று வேண்டாமா? இனி எலிகளை வளர்க்க பாதுகாக்க பராமரிக்க, ஒரு தனியாக எலித்துறையும் அதற்கு எலிமந்திரியும் நியமிக்கப்படுவார்கள்." என்று பேசுவான்.

ஏற்கனவே இரண்டு வேளை உணவை

மட்டுமே சாப்பிட்டுக்கொண்டிருக்கிற மக்கள் இதைக்கேட்டு அதிர்ச்சியடைந்தார்கள். திம்மனின் ஆட்சியில் படித்தவர்களுக்குச் சரியான வேலை கிடைக்கவில்லை. விவசாயிகளுக்கு விளைபொருளுக்கு விலையில்லை. குழந்தைகள் படிக்க பள்ளிக்கூடங்கள் இல்லை. இப்படி ஏகப்பட்ட இல்லைகளினால் மக்கள் கோபத்தில் இருந்தார்கள். இதில் இப்படி ஒரு அறிவிப்பு. மறுநாள் காலையில் தெருவுக்குத் தெரு எலிக்கோவில்கள் கட்டப்பட்டன. எலிகள் தெருக்கள், வீடுகள், கடைகள், அலுவலகங்கள் என்று எல்லா இடங்களிலும் சுதந்திரமாக அலைய ஆரம்பித்தன. வீடுகளில் கடைகளில், ஒரு பொருளை வைக்க முடியவில்லை. யாரும் எதுவும் செய்ய மாட்டார்கள் என்ற தைரியம் வந்ததும் அந்த எலிகள் வீட்டில் ரோட்டில் எல்லா இடங்களிலும் வந்து குடியேறின. எல்லோருடைய மடியிலும் ஏறி

உட்கார்ந்து அவர்கள் சாப்பிட்டுக்கொண்டிருந்தால் அவர்களுடைய கையிலிருந்தோ வாயிலிருந்தோ பிடுங்கித்தின்றன. அவர்களால் கையை ஓங்கி விரட்ட முடிய வில்லை. திம்மன் காவனித்துக் கொண்டிருப்பாரே. அது மட்டுமல்ல எலிகளை யாரும் துன்புறுத்துகிறார்களா என்று கவனிக்க எலிக்குண்டர் படையையும் ஊர் ஊராக அனுப்பியிருந்தான் திம்மன். மக்கள் வேறு வழியில்லாமல் எலியைக் கும்பிட ஆரம்பித்தார்கள். சாப்பிடுவதற்கு முன்னர் எலிக்குப் படைத்து விட்டு சாப்பிட்டார்கள். ஒருத்தர் எலியின் குண்டியைத் தொட்டுக் கும்பிட்டதால் அன்று அவர் வீட்டு முன்னறை அலமாரியில் வைத்திருந்த மசால்வடை முற்றத்தில் கிடைத்து விட்டது. இதை அவர் நண்பரிடம் சொல்ல அவர் இதை அவருடைய நண்பரிடம் சொல்ல, இப்படியே சொல்லிச் சொல்லி.... மறுநாள்

காலையில் ஊரே எலிகளின் பின்னால் அலைந்து கொண்டிருந்தது. இன்னொருவர் அவருடைய வீட்டில் எலி மூத்திரத்தை கலந்து தெளித்ததால் எறும்பு ஈ கொசுத்தொல்லை இல்லை என்று சொல்லிவிட்டார். உடனே எலி மூத்திரம் சிறந்த கிருமிநாசினி என்று விளம்பரப்படுத்தப்பட்டது.

கோவூர் நாட்டு மந்திரிகள் உடனே மவுஸூரின் என்ற பெயரில் எலிமூத்திரதீர்த்தத்தை விற்க ஆரம்பித்தனர். எலிக்கோவில்களில் திரிஎலியா என்ற தீர்த்தத்தையும் விற்க ஆரம்பித்தனர். திரிஎலியா என்றால் என்ன என்ற கேள்விக்கு எலிக்கோவில்களின் தலைமை பூசாரி தொலைக்காட்சியில் பதில் சொல்லிக்கொண்டிருந்தார். இரண்டாயிரம் ஆண்டு பழமை வாய்ந்த நம்முடைய திரிஎலியா தீர்த்தம் அனைத்து வியாதிகளையும் தீர்க்கக்கூடிய அருமருந்து. பேய்பிசாசுகளை விரட்டக்கூடியது.

அதில் ஒரு சொட்டை எடுத்து வீட்டில் எருக்கிலையில் இட்டு வீட்டில் தெளித்தால் வீடு சுத்தமாகிப் பளபளக்கும். எலிமூத்திரம், எலிப்பால், எலித்தயிர் மூன்றையும் கலந்து தயாரிக்கப்படும் திரிஎலியா உங்கள் வீட்டில் இருந்தால் செல்வம் கொழிக்கும்....” என்று மந்திரம் சொல்வதைப்போலச் சொல்லிக் கொண்டிருந்தார். மக்கள் ஏன் எதற்கு என்று கேள்வி கேட்காமல் போட்டிபோட்டுக்கொண்டு திரிஎலியாவை வாங்க அலை மோதினார்கள். பல இடங்களில் கூட்டநெரிசல். உள்ளூர் கம்பெனிகளும் உலகக் கம்பெனிகளும் போட்டி போட்டுக்கொண்டு திரிஎலியாவைத் தயாரித்தன. இதில் வேடிக்கை என்னவென்றால் நான் தான் உண்மையான திரிஎலியாவை தயாரிப்பவன் அதுவும் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் எழுதிய எலிவேதங்களில் உள்ள ஃபோர்முலாப்படி

தயாரிக்கிற கம்பெனி என்று விளம்பரங்கள் வந்தன.

மக்களில் சிலர் எலிகளைக் கண்டுகொள்ளவில்லை. சாதாரணமாக எப்போதும் போல இருந்தனர். அவர்கள் இந்த எலிக்கூச்சல்களுக்குப் பயப்படவில்லை. அவர்களைப் பயமுறுத்துவதற்காக எலிக்குண்டர்படை அவர்களுடைய வீட்டில் எலிக்கறி இருப்பதாக அரசனிடம் அறிக்கை கொடுத்தனர். புனிதமான எலியைச் சாப்பிட்டதற்காக அவர்களுக்கு ஐம்பது கசையடி கொடுக்கப்பட்டது. ஆனால் எலித்துறை மந்திரி தன்னுடைய தம்பி பெயரில் வெளிநாடுகளுக்கு எலிக்கறி ஏற்றுமதி செய்யும் வியாபாரத்தை நடத்தி வந்தார். அது கோவூர் நாட்டில் பிறந்த குழந்தை முதல் திம்மன் வரை தெரிந்த பரமரகசியம். இப்படியே கோவூர் நாட்டில்

எலிகள் பெருகிப்பெருகி மக்களுக்குச் சாப்பிட எதுவும் கிடைக்காமல் பஞ்சம் வந்து விட்டது. எலிகளுக்கும் சாப்பிட எதுவும் கிடைக்கவில்லை. ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு மனிதராகக் காணாமல் போனார்கள். திம்மனிடம் சென்று மக்கள் முறையிட்டனர். திம்மன் அவர்களை அடித்து விரட்டினான். “புனித எலியைக் குற்றம் சொல்பவர்களுக்குச் சிறைத்தண்டனை” என்று அறிவித்தான். ஒவ்வொருவராக நாட்டை விட்டு அழுதுகொண்டே வெளியேறத் தொடங்கினர். கோவூர் நாட்டின் தென்மூலையில் இருந்த பகுத்தறிவு மலையில் பதினைந்து பதினாறு வயது இளைஞர்கள் எல்லோரும் ஒன்று கூடினர். அங்கே இருந்த தாடிக்கிழவரிடம் கோவூர் நாட்டில் நடக்கின்ற அநியாயங்களைச் சொன்னார்கள். அதைக்கேட்ட தாடிக்கிழவர்,

“வெங்காயம்.. வெங்காயம்.. வெங்காயம்..”

என்று திட்டினார். அவர் இளைஞர்களிடம் ஓர் யோசனை சொன்னார். இளைஞர்கள் அவருடைய யோசனையைக் கேட்டு அப்படியே செய்வதாகச் சொல்லிச்சென்றனர். மறுநாள் காலை திம்மன் கண்விழிக்கும்போது அவன் மீது நூறு எலிகள் உட்கார்ந்திருந்தன. கூச்சலிட்டுக் கொண்டே எழுந்தான். கட்டிலுக்குக் கீழே கால் வைக்க முடியவில்லை. எங்கு பார்த்தாலும் எலிகள். எலிகள். எலிகள். அரண்மனையில் மந்திரிகள் இல்லை. தளபதிகள் இல்லை. படைவீரர்கள் இல்லை. சேவகர்கள் இல்லை. வேலைக்காரர்கள் இல்லை. சமையற்காரர்கள் இல்லை. நேரத்துக்கு ஒரு சட்டை தைத்துக்கொடுக்கும் தையல்காரர்கள் இல்லை. ஒப்பனைக்காரர்கள் இல்லை. திம்மனின் ஒவ்வொரு அசைவையும் பெரிய சாதனையாகக்காட்டும் தொலைக்காட்சி, பத்திரிகைக்காரர்கள் இல்லை. ஒருவரும் இல்லை.

எல்லோரையும் எலிகள் தின்றுவிட்டன. திம்மன் அலறிக்கொண்டே ஓடினான். ஆனால் எலிகள் அவனைவிட வேகமாக ஓடி அவனைக் கடித்தன. பசி தாங்காமல் இருந்த எலிகள் திம்மனையும் தின்று தீர்த்தன. கோவூர் நாட்டிலிருந்த அத்தனை எலிகளையும் அரண்மனைக்குள் பிடித்துக் கொண்டு வந்து விட்ட இளைஞர்கள் வெளியில் காத்துக்கொண்டிருந்தார்கள். பின்னர் எலிகளோடு சேர்த்து அரண்மனையைக் கொளுத்தினர். இப்போது கோவூர் நாட்டில் எலிகள் இல்லை. மக்கள் எல்லோரும் சேர்ந்து ஆட்சி நடத்தினர். பகுத்தறிவு மலையில் இருந்த தாடிக்கிழவரின் ஆலோசனைகளை அவ்வப்போது கேட்டு அதன் படி கோவூர் மக்கள் மகிழ்ச்சியாக வாழ்ந்தனர்.

# 3. கஞ்சனைத் திருத்திய காகம்

-ஜூன் 16, 2019

கொடையூரில் பிரபு என்று ஒரு மனிதன் வாழ்ந்து வந்தான். பெயர் தான் பிரபு. அவன் மகாக்கஞ்சன். யாருக்கும் எந்த உதவியும் செய்ய மாட்டான். தானமோ, தர்மமோ கொடுக்கமாட்டான். அந்தக் காலத்தில் சொல்வதைப் போல எச்சில் கையால் கூட காக்காவை விரட்ட மாட்டான். ஏன் தெரியுமா? அந்த எச்சில் கையில் உள்ள சோற்றுப்பருக்கைகள் கீழே விழுந்து விட்டால்? விழுந்த அந்தப்பருக்கையை காக்கா கொத்தித் தின்று விட்டால்? சாப்பிடும் போது சோற்றுப்பருக்கைகளை எண்ணி எண்ணிச் சாப்பிடுவான். மனைவி நல்லம்மாளுக்கும்,

குழந்தை தங்கத்துக்கும் கூட பருக்கைகளை எண்ணித்தான் சாப்பிடக் கொடுப்பான். சோறு வடித்த கஞ்சியைக் கூட யாருக்கும் கொடுக்க மாட்டான். அதனால் கொடையூர் மக்கள் பிரபுவுக்கு வடிகஞ்சன் என்று பெயர் வைத்து விட்டனர்.

வடிகஞ்சனின் மனைவி நல்லம்மாள் எல்லோருக்கும் உதவ வேண்டும் என்று நினைப்பவர். வீட்டுக்கு பின்புறம் உள்ள வேப்பமரத்தில் ஒரு காகம் கூடு கட்டியிருந்தது. அந்தக் காகத்துக்குத் தினமும் கம்பு, கேப்பை, அரிசி, சோறு என்று ஏதாவது ஒரு உணவைக் கொடுப்பார் நல்லம்மாள். குடிக்கத்தண்ணீரும் ஒரு சிரட்டையில் வைப்பார். அந்தக் காகமும் அவருடைய தலையைப் பார்த்ததும் மகிழ்ச்சியில் கா கா கா கா கா கா என்று கரையும். அவருக்கு அருகில் வந்து நிற்கும். நல்லம்மாள் சிரித்துக் கொண்டே, “சாப்பாடு வேணுமாக்கும்..” என்று

சொல்லி விட்டு உள்ளே போய் ஏதாவது தீனி எடுத்து வருவாள். ஓய்ந்த நேரங்களில் புறவாசலில் உட்கார்ந்து காகத்திடம் பேசிக் கொண்டிருப்பாள். எப்போதாவது தங்கம் சாப்பாடு எடுத்துக் கொண்டு வருவாள். அதனால் காகம் தங்கத்தைப் பார்த்தாலும் மகிழ்ச்சியில் கரையும். ஒரு நாள் தங்கம் பள்ளிக்கூடம் போனவள் வீட்டுக்குத் திரும்பவில்லை. நேரமாகி விட்டது. நல்லம்மாளுக்கு இருக்க முடியவில்லை. வாசலையே பார்த்துக் கொண்டிருந்தாள். வெளியே போய் விட்டு அப்போது தான் வீட்டுக்குள் நுழைந்த வடிகஞ்சனிடம்,“ஏங்க.. தங்கத்தைக் காணலேங்க..” என்று பதற்றமாய் சொன்னாள். அதைக் கேட்டதும் வடிகஞ்சன் உடனே பாய்ந்து வீட்டுக்குள் ஓடினான். ஓடி பீரோவைத் திறந்து நகைப்பெட்டியைத் தேடினான். நல்லவேளை நகைப்பெட்டி உடனே கிடைத்தது. அதைத் திறந்து

நகைகள் எல்லாம் சரியாக இருக்கிறதா என்று சரி பார்த்தான். அவன் பின்னாலேயே ஓடி வந்த நல்லம்மாள் அவனுடைய செயலைப் பார்த்து தலையில் தலையில் அடித்துக் கொண்டாள்.

"நம்ம மகளைக் காணலீங்க.." என்று கோபத்துடன் சொன்னாள். அதற்கு வடிகஞ்சன்,"அவ்வளவுதானா? வருவா வருவா.. எங்கேயாச்சும் சுத்திகிட்டு வருவா.." என்று அலட்சியமாகச் சொன்னான். நல்லம்மாள் பக்கத்து வீட்டு பார்வதிப்பாட்டியை துணைக்குக் கூட்டிட்டு தங்கத்தைத் தேடப்போனாள். ஒரு வழியாக தங்கம் அவளுடைய தோழி வீட்டில் பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருப்பதைப் பார்த்து நிம்மதியடைந்தாள். வீட்டுக்கு வந்து பார்த்தால் வடிகஞ்சன் விளக்குகளை எல்லாம் அணைத்து விட்டு தூங்கிக் கொண்டிருந்தான். ஒரு நாள் மதியம் நல்லம்மாள் புறவாசலில் துவைக்கும்

கல்லைக் கழுவி காகத்துக்குச் சோறு வைத்தாள். காகம் அவளைப் பார்த்ததும் கா கா கா கா கா என்று கரைந்து கொண்டே சோறு சாப்பிட மரத்திலிருந்து கீழே இறங்கியது. அப்போது வடிகஞ்சன் வந்து விட்டான். உடனே பாய்ந்து வந்து காகத்தை விரட்டினான். காகத்துக்கு வைத்திருந்த சோற்றை வாயில் போட்டு விழுங்கினான். பின்னர் உள்ளே சென்றான்.

நல்லம்மாளிடம்,“நான் வாயைக் கட்டி வயித்தைக் கட்டி சேர்த்து வைக்கிறத நீ காக்காவுக்கும் குருவிக்கும் போட்டு வீணடிக்கிறியா.. கழுதை..” என்று வைதான். அன்று முழுவதும் நல்லம்மாள் கண்ணில் பார்க்கும்போதெல்லாம் வைதான். எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டும் கேட்டுக் கொண்டும் இருந்தது காகம். மறுநாள் காலையில் வடிகஞ்சன் வேலைக்குக் கிளம்பினான்.

வாசல்படியை விட்டு கீழே இறங்கியது தான் உடனே எங்கிருந்தோ காகங்கள் பறந்து வந்து வடிகஞ்சனின் தலையில் கொத்தின. “ஐயோ அம்மா” என்று அலறிக்கொண்டே வீட்டுக்குள் ஓடினான். மறுபடியும் கொஞ்சநேரம் கழித்து வாசல்படியில் நின்று வெளியில் பார்த்தான். எதுவும் இல்லை. மெல்ல தெருவில் இறங்கினான். அவன் தெருவில் இரண்டடி தான் எடுத்து வைத்திருப்பான். எங்கிருந்து தான் வருமோ? அப்படி ஒரு படையெடுப்பு. காகங்கள் பறந்து வந்தன. அவன் விழுந்தடித்து வீட்டுக்குள் ஓடினான். அப்படியும் ஒரு காகம் அவன் தலையில் கொத்தி விட்டது. அன்று பகல் முழுவதும் அப்படித்தான் நடந்தது.

இரவில் தான் அவன் வெளியே போக முடிந்தது. அவனுக்குப் புரிந்து விட்டது. அவன் காகத்துக்கு வைத்திருந்த சோற்றைத்

தின்றதால் வந்த கோபம். இரவு முழுதும் அவனுடைய காதுகளில் காக்கைகளின் கா கா கா கா கா கா சத்தம் கேட்டுக்கொண்டிருந்தது. மறுநாள் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, காக்காக்களுக்கு அவ்வளவு ஞாபகசக்தியா இருக்கும்? என்று நினைத்துக் கொண்டே தலையில் முக்காடு போட்டுக் கொண்டு வடிகஞ்சன் தெருவில் நடந்தான். ஒன்றும் நடக்கவில்லை. சரி. இனி பயமில்லை என்று நினைத்தான். அவனுடைய தெருவைத் தான் கடந்திருப்பான். ஒரு காகம் அவனுடைய முகத்துக்கு நேரே பறந்து அவனைப் பார்த்து விட்டது. அவன் யோசிப்பதற்குள் ஒரு கூட்டம் வந்து கொத்தி எடுத்து விட்டது. அவன் மறுபடி வீட்டுக்கு ஓடிப் போனான். முகத்தில், தலையில், ரத்தக்காயம். டாக்டர் வீட்டுக்கு வந்து மருத்துவம் பார்த்தார். பத்து நாட்களாக வீட்டுக்குள்ளேயே கிடந்தான்

வடிகஞ்சன். ஊரெல்லாம் காகம் விரட்டிய வடிகஞ்சனைப் பற்றித்தான் பேச்சு. பத்திரிகைகள், தொலைக்காட்சிகளில் கூட அந்தச்செய்தி வந்து விட்டது. வடிகஞ்சனால் இரவில் கூட தலைகாட்டமுடியவில்லை. எல்லோரும் “காக்காவை என்ன செய்ஞ்சே? என்ன செய்ஞ்சே..?” என்று கேட்டார்கள். அவர்களிடம் காக்காவுக்கு வைத்திருந்த சோற்றைத் தின்னுட்டேன்னு சொல்லவா முடியும்? காகத்தின் சத்தம் கேட்டாலே வடிகஞ்சனின் உடல் நடுங்கியது.

கடைசியில் நல்லம்மாளிடம்,“நல்லம்மா என்னை மன்னிச்சிரு.. ஏதாச்சும் செய்யணும்.. சொல்லு.. எனக்குக் கேவலமா இருக்கு..” என்று சொன்னான். நல்லம்மாள் ஆறுதலாக அவனிடம், “நம்ம எல்லோருக்கும் ஒரு வாழ்க்கை தான்.. அதை எல்லோருக்கும் உதவி செய்ஞ்சு, மகிழ்ச்சியாக வாழணும்... அவ்வளவு தான்... நாளைக்கு நீங்களே

காக்காவுக்குச் சோறு வைங்க..” என்றாள். மறுநாள் காலை புறவாசலில் இருந்த திண்டில் வடிகஞ்சன் இல்லையில்லை பிரபு காக்காவுக்குச் சோறு வைத்தான். வேப்பமரத்திலிருந்த காகம் முதலில் சந்தேகமாகப் பார்த்தாலும், அருகில் நல்லம்மாள் இருப்பதைப் பார்த்து தைரியமாகப் பறந்து வந்து சோற்றைச் சாப்பிட்டு மற்றவர்களையும் அழைத்தது. எல்லாக் காகங்களும் கூட்டமாகச் சாப்பிடுவதைப் பார்த்த பிரபுவுக்கு ஆனந்தக்கண்ணீர் வந்தது. அதன் பிறகு அவன் எல்லோருக்கும் உதவிகள் செய்து மகிழ்ச்சியாக வாழ்ந்தான். இப்போது அவனை எல்லோரும் பிரபு என்றே கூப்பிடுகிறார்கள்.

# 4. கும்பிடுறேன்சாமி !

-ஜூன் 23, 2019

அவனுக்கு அவனுடைய அய்யாவின் மீது கோபம் கோபமாக வந்தது. யாராவது பிள்ளைக்கு மண்ணாங்கட்டி என்று பெயர் வைப்பார்களா? கேட்டால் அவனுக்கு முன்னால் பிறந்த குழந்தைகள் எல்லாம் பிறந்து ஒன்றிரண்டு மாதங்களில் இறந்து விட்டார்களாம். அவர்களை எல்லாம். கடவுள் எடுத்துக்கொண்டாராம். மண்ணாங்கட்டி என்று பெயர் வைத்தால் கடவுள் வேண்டாம் என்று விட்டு விடுவாராம். அப்படி விட்ட பேராம். அவ்வளவு வெள்ளந்தியாகவா கடவுள் இருப்பார்? மண்ணாங்கட்டிக்கு கோபம் வந்தது. என்ன செய்வது என்று

தெரியவில்லை. பள்ளிக்கூடத்தில் மற்ற பையன்களுக்கு ரமேஷ், சுரேஷ், ராமசாமி, குருசாமி, சங்கரநாராயணன் என்று அழகழகான பெயர்கள் இருக்கும்போது எல்லோரும் அவனை இளக்காரமாகப் பார்க்கிறார்கள்.

“போடா மண்ணாங்கட்டி தெருப்புழுதி” என்று கேலி செய்கிறார்கள். ஆசிரியரும் கூப்பிடும்போதே, “ஏலே மண்ணு உன்பேர் தான் மண்ணுன்னா தலையிலேயும் மண்ணுதானா?” என்று சும்மா திட்டுகிறார். இத்தனைக்கும் அவன் கஷ்டப்பட்டு படித்து முதல் பத்து ரேங்கில் வந்து விடுவான். ஆனால் அதையெல்லாம் மதிப்பதில்லை. அதோடு ஆசிரியர்களுக்கு மற்ற மாணவர்கள் “குட்மார்னிங் சார்” என்று சொல்கிறார்கள். ஆனால் அவன் மட்டும் “கும்பிடுறேன் ஐயா” என்று சொல்லணும். வகுப்பறையைப் பெருக்கணும்னாலும்

மண்ணாங்கட்டியைக் கூப்பிடு. பாம்பு, தேளு, பல்லி, பூரான், அடிக்கணும்னாலும் மண்ணாங்கட்டியைக் கூப்பிடு. எந்த முரட்டு வேலையாக இருந்தாலும் மண்ணாங்கட்டியைக் கூப்பிடு தான். ஒரு தடவை பள்ளிக்கூடக் கக்கூஸைக் கழுவணும் வா மண்ணாங்கட்டி என்று பியூன் வந்து கூப்பிட்டார். அவனுக்கு அழுகையே வந்து விட்டது. வரமுடியாது என்று மறுத்து விட்டான். எந்த அரட்டல் மிரட்டல் உருட்டலுக்கும் பயப்படாமல் மறுத்து விட்டான் மண்ணாங்கட்டி.

எப்படியாவது படித்து அவனுடைய தெருவில் இருந்த அறிவழகன் அண்ணன் மாதிரி பெரிய வேலைக்குப் போகவேண்டும் என்று நினைத்தான் மண்ணாங்கட்டி. ஆனால் இந்தப் பெயரைச் சொல்லி அவனை காலம் பூராவும் அவமானப்படுத்துவார்களே. என்ன செய்ய? அவனுடன் பேதம் பார்க்காமல் பழகக்கூடியவன்

அன்பரசு மட்டும் தான். அவன் மண்ணாங்கட்டியை உற்சாகப்படுத்திக் கொண்டேயிருப்பான். மண்ணாங்கட்டி அவனிடம் தன்னுடைய வருத்தத்தைச் சொன்னான். அன்பரசு யார் வேண்டுமானாலும் எப்போது வேண்டுமானாலும் தன்னுடைய பெயரை மாற்றிக் கொள்ளலாம். அரசு பதிவிதழில் அறிவிக்கை செய்து விட்டு பெயரை மாற்றிக்கொள்ளலாம். என்று சொன்னான். உடனே அவன் யோசிக்க ஆரம்பித்தான். இதுவரை அவன் பட்ட அவமானங்களைத் துடைத்து எறிய வேண்டும் என்று நினைத்தான்.

மூன்று மாதங்கள் கழிந்தது. அரையாண்டு பரீட்சை லீவு முடிந்து பள்ளிக்கு எல்லோரும் வந்திருந்தார்கள். அன்று வருகைப்பதிவு எடுத்தார் வகுப்பாசிரியர். ” ஆனந்தன்,” ” உள்ளேன் ஐயா..” ” ஆறுமுகம் ” ” உள்ளேன் ஐயா ”

என்று வரிசையாகக் கூப்பிட்டுக்கொண்டே வந்தார். ஒரு பெயருக்கு முன்னால் கொஞ்சம் தடுமாறி நின்றார். “கும்பிடுறேன்சாமி..” “உள்ளேன் ஐயா” குரல் வந்த திக்கில் நிமிர்ந்து பார்த்தார். அங்கே கும்பிடுறேன்சாமி எழுந்து நின்றான். அவன் முகத்தில் ஒரு புன்னகை பூத்திருந்தது.

# 5. காட்டில் ஒரு துவக்கப்பள்ளி

-ஜூலை 7, 2019

ஒரு காட்டில் ஒரு பள்ளிக்கூடம் இருந்தது. அதில் தலைமை ஆசிரியர் சிங்கம் ஆவார். அந்தப் பள்ளிக்கூடத்தின் ஒரு வகுப்பின் வகுப்பாசிரியர் மலைப்பாம்பு. அந்த வகுப்பில் புலிக்குட்டி, யானைக்கன்று, நரிக்குட்டி, பூனை குட்டி, கங்காரு குட்டி, குரங்கு குட்டி என அனைவரும் படித்தார்கள் அந்த வகுப்பில் புலிகுட்டி மட்டும் நன்றாக படிக்கும். யானைகுட்டியும் மற்ற குட்டிகளும், குரங்கு குட்டியும் நரி குட்டியும் செய்யும் சேட்டைகளை பார்த்துக்கொண்டே ஆசிரியர் மலைப்பாம்பு நடத்தும் பாடங்களை கவனிக்காது அப்போது ஒருநாள் பரிட்சை வந்தது.

அதில் புலிக்குட்டி முதலிடம் பெற்றது. தலைமை ஆசிரியர் சிங்கம் புலிக்குட்டியை மிகவும் பாராட்டினார் இதை பார்த்த யானைக்குட்டி கோபமாக வீட்டிற்குச் சென்றது புலிக்குட்டி யானையை மறித்து "ஏன் யானையே கோபமாக இருக்கிறாய்?"என்றது. அதற்கு யானைக்குட்டி, "எல்லோரும் உன்னை மட்டும் பாராட்டுகிறார்கள். அதனால் நான் இனிமேல் பள்ளிக்கூடத்திற்கு வரமாட்டேன் எனக்கு படிப்பு வரவில்லை"! என்று சொன்னது.

அதற்கு புலிக்குட்டி, "உன்னை ஏன் பாராட்டவில்லை தெரியுமா? நீ குரங்கும் நரியும் செய்யும் சேட்டையை பார்த்துக்கொண்டு ஆசிரியர் நடத்துகிற பாடங்களை கவனிப்பதில்லை. பாடங்களை கவனித்தால் தான் நன்றாக படிக்கலாம்" என்றது. அதற்கு யானைக்குட்டி, "நான்தான் ஆசிரியர் நடத்திய பாடங்களை

கவனிக்கவில்லையே நான் எப்படி படிக்க முடியும்" என்றது.

அதற்கு புலிக்குட்டி, "நான் கவனித்துள்ளேன். கவனித்த பாடங்களை உனக்கு சொல்லிக்கொடுக்கிறேன். இருவரும் சேர்ந்து படிக்கலாம் என்றது. பின்பு யானை கொஞ்சம் கொஞ்சமாக படித்தது.

பின்பு ஒருநாள் பரிட்சை வந்தது. அதில் யானைக்குட்டி போன முறை எடுத்த மதிப்பெண்களை விட அதிகமாக எடுத்து தோல்வி அடைந்தது. ஆனால், பின்பு வந்த பரிட்சையில் நல்ல மதிப்பெண் பெற்று வெற்றி அடைந்தது. தலைமையாசிரியர் சிங்கம் வகுப்பிற்கு வந்து யானைக்குட்டியை பாராட்டினார். அதைப் பார்த்த குரங்கு குட்டி, நரிக்குட்டி, ஓநாய் குட்டி, கங்காரு குட்டி என எல்லோரும் இனிமேல்

நாங்களும் படிப்போம் என்றார்கள். பின்பு அனைவரும் சேர்ந்து நன்றாக படித்தார்கள். வகுப்பு ஆசிரியரும் தலைமை ஆசிரியரும் எல்லோரையும் பாராட்டினார்கள்.

மேற்குத்தொடர்ச்சி மலையின் கடைசியில் இருந்த குற்றியாறு காட்டில் ஏராளமான காட்டுப்பன்றிகள் வாழ்ந்தன. பெரிய எதிரிகள் என்று யாரும் கிடையாது. புலி கிடையாது. சிறுத்தை கிடையாது. ஓநாய் கிடையாது. காட்டுநாய் கிடையாது. காட்டுப்பூனை கிடையாது. மலைப்பாம்பு கிடையாது. எனவே காட்டுபன்றிகள் மகிழ்ச்சியாக வாழ்ந்து வந்தன. அந்த மலையில் காட்டுப்பன்றிக் கூட்டத்துக்கான உணவும் தாராளமாகக் கிடைத்தன. புற்களைச் சாப்பிட புல்வெளிகள், சாறும் சுவையும் உள்ள தண்டுகள், தளிர் இலைகள் நிறைந்த செடிகள், இனிப்பான கிழங்குகள் உள்ள வேர்கள் என்று ஏராளமான உணவு இயற்கையில் இருந்தது. எனவே கவலை இல்லாமல் வாழ்ந்தன காட்டுப்பன்றிகள்.

ஒரு காட்டுப்பன்றிக் கூட்டத்துக்கு சூசா என்ற பெண்பன்றி தலைவியாக இருந்தது.

சூசா தன்னுடைய கூட்டத்துக்கு எந்த ஆபத்தும் இல்லாமல் பத்திரமாகப் பார்த்துக் கொண்டது. ஒவ்வொரு முறையும் ஐந்து அல்லது ஆறு குட்டிகளை சூசா ஈனும். அந்தக்குட்டிகளைக் கண்ணும் கருத்துமாய் வளர்க்கும். அப்படித்தான் போன நவம்பர் மாதம் சூசா குட்டிகளை அழைத்துக்கொண்டு இரை தேடப்போனது. புதரில் அது கட்டியிருந்த வீட்டில் இருந்து புறப்படும்போது ஆறு குட்டிகள் இருந்தன. கொஞ்ச தூரம் போனபிறகு பார்த்தால் ஐந்து தான் இருந்தன. சூசா குரல் கொடுத்தது. ம்ஹெஹே என்ற சத்தத்தைக் கேட்டதும் ஐந்து குட்டிகளும் தாயின் அருகில் ஓடி வந்து நின்றன. ஆனால் ஆறாவது குட்டியைக் காணவில்லை. மீண்டும் மீண்டும் குரல் கொடுத்தது. அன்று சூசா இரவு முழுவதும் தூங்கவில்லை. மறு நாள் மற்ற குடும்பத்தில் உள்ள தாய்மார்களும் அவர்களுடைய குட்டிகளில்

ஒன்றைக் காணோம் என்று சூசாவிடம் வந்து சொன்னார்கள். சூசாவுக்குப் புரியவில்லை. எப்படிக் காணாமல் போகும்? யாராவது புதிய எதிரிகள் வந்திருக்கிறார்களா? என்று மண்டையைப் போட்டு குழப்பிக்கொண்டிருந்தது. இப்போது குட்டிகளை முன்னால் விட்டு சூசா பின்னால் போனது. கோரைக்கிழங்குச் செடியை வளைந்து நீண்ட தன்னுடைய கோரைப்பல்லால் குனிந்து நோண்டி மண்ணைக் கிளைத்தது. நிமிர்ந்து பார்த்தால் ஐந்தில் ஒரு குட்டியைக் காணவில்லை. சூசா கோபத்தில் கத்தியது. அது கத்தியவுடன் மற்ற காட்டுப்பன்றிகளும் ஓங்கிக் குரல் கொடுத்தன. காடு அதிர்ந்தது.

அடுத்த இரண்டு நாட்களுக்கு வீட்டை விட்டு வெளியே போகவில்லை. வீட்டுக்கு அருகில் கிடைத்ததைச் சாப்பிட்டுக் கொண்டு சுற்றிலும் கவனமாகப் பார்த்துக் கொண்டிருந்தது. அப்போது

காற்று திசை மாறியது. மோப்பசக்தியில் கில்லாடியான சூசாவின் மூக்கில் ஒரு வாசனை வந்து மோதியது. அது..அது.. ஒரு புலியின் வாசனை..... என்னது புலியா? இந்தக்காட்டில் புலியா? சூசாவால் நம்பமுடியவில்லை. நம்பாமல் இருக்கவும் முடியவில்லை. உடனே அருகில் இருந்த அயினி மரத்தில் நின்று கொண்டிருந்த காட்டு அணிலிடம், “டேய் தம்பி உண்மையா இது?” டபக்கென்று திரும்பி வாலை ஆட்டிய காட்டு அணில், “எது உண்மையா?” “அதான் நம்ம காட்டில் புலி இருக்கா?” “ஓ அதுவா? எங்கிருந்தோ ஒரு கிழட்டுப்புலி வந்திருக்கு.. அதுக்கு ஓடவும் முடியல.. நிக்கவும் முடியல.. எங்கேயாச்சும் ஓடாமக்கொள்ளாம வேட்டையாடிக்கிட்டு இருக்கு.. ஏன் கேக்கிறே சூசாக்கா?” சூசா தன்னுடைய குட்டிகள் இரண்டு காணாமல் போன கதையைச் சொன்னது. காட்டு அணிலுக்குப் பாவமாக

இருந்தது. "பார்த்து பத்திரமா இருங்க சூசாக்கா?" என்று சொல்லி படக்கென்று திரும்பி வாலை ஆட்டி விட்டு மரத்தில் ஏறியது. சூசா யோசித்தது. அப்படியென்றால் இங்கே தான் அருகில் எங்கேயோ இருக்க வேண்டும் அந்தக்கிழட்டுப்புலி.

இரவில் புதருக்கு அருகில் இருந்த ஆம்பல் குளத்தில் போய் சகதியில் குளித்தது. விடிய விடிய அதிலேயே ஊறிக்கிடந்தது. சூசாவின் உடம்பில் சகதி ஒட்டி ஒட்டி பயங்கரமாக ஆகிவிட்டது. காலையில் அது புதருக்கு வரும்போது நீண்ட அதன் பல்லைத்தவிர சூசாவின் உடல் எங்கும் கருப்பு நிறத்தில் சகதி படிந்து ஒரு புதிய வடிவத்தில் இருந்தது. சூசாவின் வீட்டுக்கருகில் இருந்த ஒரு பெரிய புதரில் தான் அந்தக்கிழட்டுப்புலியும் இருந்தது. சூசா தைரியத்துடன் அந்தப்புலியின் வாசனையை மோப்பம் பிடித்து அந்தப் புதரில் போய் நின்று கொடூரமாய் ஒரு குரல் கொடுத்தது.

“யாரடா அது என்னோட ஏரியாவில் வந்து வேட்டையாடிக் கிட்டிருக்கறது..” புதரில் இருந்து வெளியே வந்த புலி சூசாவின் உருவத்தைப் பார்த்து பயந்து போனது. அதோடு சகதியின் நாற்றம் தாங்க முடியவில்லை. மூக்கைப் பொத்திக்கொண்டது. “நான் நான் தெரியாம வந்துட்டேன்.. நாளைக்குப் போயிடறேன்..” “என்னது நாளைக்கா? ஹ்ஹாஹ்ஹாஹ்ஹா.. உன்னை இப்பவே குத்திக்கிழிச்சி குடலை உருவி காலை டிபனாச்சாப்பிடலை... என் பேரு சாசூ..ஊஊஊ.. இல்லை..”

புலி பயந்து போனது. ஆனால் இடத்தை விட்டு அசையவில்லை. சூசா இரண்டடி முன்னால் எடுத்து வைத்து கோரைப்பல்லை தரையோடு தேய்த்தது. தரையில் அரையடி ஆழத்துக்குக் கோடு விழுந்தது. அவ்வளவு தான் புலி எடுத்தது ஓட்டம். சூசா விடவில்லை.

பின்னாலேயே விரட்டிக்கொண்டு ஓடியது. புலிக்கு பின்னால் துரத்திக்கொண்டு வந்த அந்த பயங்கர மிருகத்தை விட அதனுடைய நாற்றத்தைத் தாங்க முடியவில்லை. தலைகுப்புற விழுந்து ஓடி குற்றியலூர் காட்டை விட்டே மறைந்து போனது. நல்லவேளை. புலி திரும்பிப்பார்க்கவில்லை. சூரியவெளிச்சத்தில் சூசாவின் மீது ஒட்டியிருந்த சகதி எல்லாம் உதிர்ந்து போய் அதன் மாறுவேடம் கலைந்து போயிருந்ததைப் பார்த்திருக்கும். சூசாவின் தந்திரம் பலித்து விட்டது. அதன்பிறகு அந்தக்காட்டில் காட்டுப்பன்றிகள் மகிழ்ச்சியோடு வாழ்ந்தன.

# 7. ஒரு சொட்டு தண்ணீர்

-ஜூலை 21, 2019

“நிகி! நேரமாயிடுச்சிம்மா சீக்கிரம் பாத்ரூம்லர்ந்து வெளியே வா. கம் குயிக்.” நிகிதாவின் அம்மா பத்து நிமிடமாகக் கூப்பிட்டுக்கொண்டேயிருந்தார். அதற்கு நிகிதா, “வாரேம்மா.. இன்னும் குளிச்சி முடியல..” என்று பதில் கொடுத்தாள். இன்றைக்கு அம்மா அப்பா தம்பி பிரிஜேஷ் நிகிதா எல்லோரும் ரயிலில் திருநெல்வேலி வரை போகிறார்கள். நிகிதாவுக்கும் பிரிஜேஷுக்கும் ஸ்கூல் யூனிபார்ம், பேக், சூஸ், என்று எல்லாம் வாங்கப்போகிறார்கள். ரயிலில் அதிகம் போனதில்லை. எப்போதும் காரில் தான் பயணம். இந்த முறை அப்பா

தான் ரயிலில் போகலாம். ஒரு வித்தியாசமான அனுபவமாக இருக்கும் என்றார். நிகிதாவுக்கு குளிப்பது என்றால் அப்படி பிடிக்கும். குறைந்தது அரை மணிநேரமாவது பாத்ரூமில் இருப்பாள். ஒரு நாளைக்கு இரண்டு, மூன்று முறை கூடக் குளிப்பாள். கோடையோ குளிர்காலமோ அவர்களுடைய வீட்டில் தண்ணீர் வற்றாமல் வரும். வீட்டிலுள்ள குழாய்களில் தண்ணீர் சொட்டிக்கொண்டே இருக்கும். யாரும் அதைப் பற்றிக் கவலைப்பட மாட்டார்கள்.

ஒருவழியாக நிகிதா வெளியே வரும்போது எல்லோரும் தயாராக இருந்தார்கள். அவளும் அவசர அவசரமாகப் புறப்பட்டாள். ரயில் பயணம் புதிய அனுபவமாக இருந்தது. முதலில் ரயிலின் சத்தம். கடகடா படபடா சடசடா என்று சத்தமே அவளை உற்சாகப்படுத்தியது. தம்பியும் ரயிலைப்போலவே சத்தம் கொடுத்தான். நிகிதா

சன்னலுக்கு வெளியே பார்த்தாள். பின்னால் ஓடிக்கொண்டிருந்த தரை. வீடுகள், செடிகள், கொடிகள், மரங்கள், மனிதர்கள். வெட்டவெளி. பொட்டல் காடு. கடுமையான வெயிலினைத் தாங்க முடியாமல் வெடித்துக் கிடந்த கருப்புமண். உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு நின்று கொண்டிருந்த ஒன்றிரண்டு மரங்கள். நிழல் மாதிரி நடமாடும் மனிதர்கள். நிகிதாவுக்கு ஆச்சரியமாக இருந்தது. வேறு ஒரு உலகமாக இருந்தது. அவள் உள்ளே திரும்பிப் பார்த்தாள். ஒரே பெட்டியில் எல்லோரும் ஒருவரை ஒருவர் பார்த்தபடி பேசிக்கொண்டே வந்தார்கள். நிறைய வியாபாரிகள் கடலை, வெள்ளரிக்காய், முறுக்கு, சுண்டல், காபி, டீ, போண்டா, வடை, போளி என்று விதவிதமான தின்பண்டங்களைக் கொண்டு வந்தார்கள். பிரிஜேஷ் அம்மாவிடம் வடை வேண்டும் என்றான். அம்மா வாங்கவில்லை.

நிகிதாவுக்கும் போளி சாப்பிட ஆசை இருந்தது. அம்மாவின் முகத்தைப் பார்த்து பேசாமல் இருந்து விட்டாள். ரயில் பெட்டியிலேயே டாய்லெட் இருந்தது. வெளியே ஒரு வாஷ் பேசினும் இருந்தது. விசித்திரமாக இருந்தது. எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டே வந்தாள் நிகிதா.

இப்படி ஒரு உலகம் இருப்பதே அவளுக்குத் தெரியாது. அவள் இருக்கும் நகரத்தில் எல்லாம் நாகரீகம். அவள் படிக்கும் பள்ளிக்கூடம் குளிர்சாதன வசதி கொண்டது. அவளுடைய வீட்டிலும் படுக்கையறைகள் குளிர்சாதன வசதி கொண்டது. வீட்டில் பள்ளியில் எல்லாம் பாதுகாக்கப்பட்ட ஓசோனைஸ்டு குடிநீர். ஆர்கானிக் காய்கறிகள், பழங்கள், ஹைஜீனிக் உணவு. அம்மா எல்லாவற்றிலும் மிகுந்த கவனம் எடுத்துக் கொள்வார்கள். வீடு விட்டால் பள்ளிக்கூடம். பள்ளிக்கூடம் விட்டால் வீடு

என்று அவளுடைய உலகம் மிகவும் சின்னது. இப்போது பார்க்க பார்க்க அவளுக்கு எல்லாம் புதிதாக இருந்தது. ரயில் ஒரு ஸ்டேஷனில் நின்றது. உடனே வெளியிலிருந்து சத்தம் கேட்டது. "நீ அந்தப் பெட்டிக்குப் போ.. பெரிய குடத்தை எடுத்துக்கோ.. வாளியில பிடி... சிந்தாமப்பிடி..." என்று குரல்கள் கேட்டது. எல்லாப்பெட்டிகளிலும் குடங்கள், பானைகள், வாளிகளை எடுத்துக் கொண்டு ஆண்கள், பெண்கள், குழந்தைகள் கூட்டம் கூட்டமாக ஏறினார்கள். வாஷ் பேசின், டாய்லெட் என்று நுழைந்து அவர்கள் கொண்டுவந்த குடங்களிலும் வாளிகளிலும் தண்ணீர் பிடித்தார்கள். நிகிதா அங்கும் இங்கும் தண்ணீருக்காக அலைபாய்ந்து கொண்டிருந்த ஆட்களைப் பார்த்தாள். தம்பி பிரிஜேஷ் பயந்து போய் அம்மாவின் மடியில் படுத்துக் கொண்டான். அப்போது நிகிதாவை விட

சின்னப்பிள்ளையாக இருந்த ஒரு பெண்குழந்தை கையில் சிறிய வாளியில் தண்ணீரைப் பிடித்து குடங்களில் நிறைத்துக் கொண்டிருந்தது. அப்படி நிறைத்த குடத்தை கீழே பிளாட்பார்மில் இருந்தவர்களிடம் கொடுத்துக் கொண்டிருந்தது. அப்படி செய்யும்போதே அந்தக் குழந்தை நிகிதாவைக் கண்கொட்டாமல் பார்த்தது. அவளைப் பார்த்துச் சிரிக்கவும் செய்தது.

நிகிதாவும் சிரித்தாள். அந்தப்பிள்ளை அவளைத் தாண்டிப் போகும்போது, “எதுக்கு இந்தத் தண்ணியைப் பிடிக்கிறீங்க..” என்று நிகிதா கேட்டாள். அதற்கு அந்தக்குழந்தை வேகமாக, “எங்கூர்ல தண்ணியே கிடையாது.. இந்தத்தண்ணி தான் குடிக்கிறதுக்கு, குளிக்கிறதுக்கு, சமைக்க, எல்லாத்துக்கும்... நாளைக்கு இந்த வண்டி வர்றவரைக்கும் இதான் எங்களுக்கு.. உன்னோட சட்டை அழகா இருக்கு” என்று

வெட்கத்துடன் சிரித்துக் கொண்டே சொல்லி விட்டுப் போனாள். போகும்போது வெளியே வாசல்பக்கம் இருந்த வாஷ்பேசின் குழாயில் நீர் சொட்டிக்கொண்டிருந்தது. உடனே அதை இறுக்கி அடைத்து விட்டுப் போனாள் அந்தக் குழந்தை. ரயில் கிளம்பிவிட்டது. சன்னல் வழியே வெளியே பார்த்தாள் நிகிதா. வரிசையாக குடங்கள், வாளிகள், பானைகள், சின்ன டப்பாக்கள் என்று எல்லாவற்றிலும் தண்ணீரைப் பிடித்து வைத்துக் கொண்டு நின்றிருந்தார்கள் மக்கள். அவள் அந்தப் பெண்குழந்தையைத் தேடினாள். ரயில் வேகம் எடுத்து விட்டது. அமைதியாக யோசித்துக் கொண்டே வந்தாள். மறுநாள் நிகிதா ஐந்து நிமிடத்தில் குளித்தாள். வீட்டிலுள்ள குழாய்களில் தண்ணீர் சொட்டாமல் இறுக மூடினாள். பள்ளியிலும் அவளுடைய நண்பர்களிடம் சொன்னாள். அந்த ரயில்

அனுபவத்தை ஒரு கதையாக எழுதினால் எப்படி இருக்கும் என்று யோசித்தாள். இரவில் அவளுடைய நோட்டை எடுத்தாள். நோட்டை விரித்ததும் அந்தப் பெண்குழந்தையின் வெட்கம் கலந்த சிரிப்பு ஞாபகத்துக்கு வந்தது. நீர் சொட்டிக்கொண்டிருந்த குழாய் கண்முன்னே தெரிந்தது. கதைக்கு என்ன தலைப்பு வைக்கலாம்? என்று யோசித்தாள். சிறிது நேரத்துக்குப் பின்னர் நிகிதா எழுதினாள். “ஒரு சொட்டு தண்ணீர்..”

# 8. நஸ்ரியாவின் செடி

-ஆகஸ்ட் 11, 2019

நஸ்ரியா ஒரு குட்டிப்பாப்பா. குட்டிப்பாப்பா என்றால் மூன்று வயது முடிந்த குட்டிப்பாப்பா. வீட்டுக்குள் ஒரு நிமிடம் கூட நிற்க மாட்டாள். ஒரே ஓட்டம் தான். உம்மா கூட, “ஒரு இடத்துல நிக்குதா பாரு.. அங்கிட்டும் இங்கிட்டும் ஓட்டமும் சாட்டமும்..” என்று சொல்லிச் சிரிப்பாள். அப்படி ஓடும்போது நஸ்ரியா அப்படி இப்படித் தடுமாறுவாள். கால்கள் பின்னும். கீழே விழப்போவதைப் போல சாய்வாள். ஆனால் விழாமல் சமாளித்து விடுவாள். அப்போது யாராவது அவளுடைய வாப்பாவோ, உம்மாவோ இருந்தால் அவர்களைப் பார்த்துச் சிரிப்பாள். எப்படித் தெரியுமா?

வாயிலிருந்து கெக்கேக் கீக்கி என்ற சத்தம் வரும். எளிறும் பால்பற்களும் தெரிய பளீரெனச் சிரிப்பாள்.. பெருமை. கீழே விழாமல் சமாளித்து விட்டாளாம். அப்படி யாரும் இல்லையென்றால் நஸ்ரியா சிரிக்கமாட்டாள்.. அடுக்களையில் இருக்கும் உம்மா வையோ தோட்டத்தில் இருக்கும் வாப்பாவையோ தேடிப்போவாள். அப்பவும் ஓட்டம் தான். போய் அவர்களுடைய முகத்தைத் திருப்பி நேராகப் பார்த்துக் கொண்டு சிரிப்பாள். அவர்களுக்கு நஸ்ரியா எதுக்குச் சிரிக்கிறாள் என்று தெரியாது. ஆனால் நஸ்ரியாவுக்குத் தெரியுமே. நஸ்ரியாவுக்கு தோட்டம் தான் மிகவும் பிடித்த இடம். தென்னை மரங்கள், மாமரங்கள், ஒரு பெரிய வேப்பமரம், ஒரு புளிய மரம், சம்பங்கி, மல்லிகை, கனகாம்பரம், ரோஜா என்று பூச்செடிகள், காட்டுச்செடிகள், நெருஞ்சி, தும்பை, கொளுஞ்சி, தாத்தாச்செடி, முசுமுசுக்கை, நுணாக்கொடிகளும்

நிறைந்திருக்கும். அதிகாலையில் ஒரு கருங்குயிலின் கூக்கூக்க்கூகூ சத்தம் தான் நஸ்ரியாவை எழுப்பிவிடும். அவள் எழுந்தவுடன் தோட்டத்திற்குத் தான் போவாள். எப்படியாவது அந்தக்குயிலக்காவைப் பார்க்கவேண்டும் என்று அங்கும் இங்கும் ஓடுவாள். சத்தம் வரும். ஆனால் பார்க்க முடியாது. சில நேரம் கருகருவென குயிலக்காவின் வாலின் நுனி மட்டும் தெரியும்.

“கண்ணாமூச்சி ஆடுறியா.. இரு இரு வாப்பா கிட்டச் சொல்லி உன்னைப் பிடிச்சித்தரச் சொல்றேன்..” நஸ்ரியாவுக்குக் கோபமாக வந்தது. சுற்றிச் சுற்றிப் பார்த்தாள். வாப்பா தூரத்தில் பாத்திகளுக்குத் தண்ணீர் பாய்ச்சிக் கொண்டிருந்தார். அப்படியே உட்கார்ந்து மண்ணைக் கிளற ஆரம்பித்து விட்டாள். வேப்பமரத்தடியில் நிறைய வேப்பங்கொட்டைகள் கிடந்தன. அதில் ஒரு கொட்டையை எடுத்து

வாய்க்கருகில் கொண்டு போனாள் நஸ்ரியா. அந்தக் கொட்டை கசந்தது. முகத்தைச் சுளித்தாள். நஸ்ரியாவுக்குத் தான் கசப்பு பிடிக்காதே. அப்படியே அந்தக்கொட்டையை அவள் தோண்டியிருந்த சின்னப்பள்ளத்தில் போட்டாள். மண்ணைப் போட்டு மூடினாள். அவள் மூடிக்கொண்டிருக்கும்போது மாமரத்தில் இருந்து அணில் அண்ணன் வீச் வீச் என்று சத்தம் கொடுத்துக் கொண்டே ஓடினான். நஸ்ரியாவுக்கு அணில் அண்ணனின் வாலைத் தொடவேண்டும் போலிருந்தது. கைகளை நீட்டினாள். அணில் அண்ணன் அவளைக் கவனிக்கவில்லை.. நஸ்ரியா அணில் அண்ணனோடு டூ விட்டாள். அவளுக்கு அழுகை வரும்போல இருந்தது. அழலாமா வேண்டாமா என்று யோசித்தாள். அப்போது ஒரு செவலை நிறக் கும்பிடு பூச்சி அவளுக்கு முன்னால் வந்து

“காலை வணக்கம் குட்டிப்பாப்பா..” என்று இரண்டு கைகளையும் சேர்த்துத் தூக்கிக்கும்பிட்டது. நஸ்ரியாவும் அவளுடைய இரண்டு கைகளையும் சேர்த்துக் கும்பிட்டு “குட்மார்னிங்..” என்றாள். உம்மா இங்கிலீஷில் தான் சொல்லவேண்டும் என்று சொல்லியிருக்கிறாள். கை கொடுக்கலாம் என்று அவளுடைய கையை நீட்டினாள். ஆனால் கும்பிடுபூச்சி அதை விரும்பவில்லை. பறந்துவிட்டது. அவளுக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. அருகில் வாய்க்காலில் ஓடிக்கொண்டிருந்த தண்ணீரில் இறங்கினாள். உடம்பு புல்லரித்தது. நஸ்ரியாவின் முழங்கால் அளவு ஓடிக்கொண்டிருந்த தண்ணீரில் அப்படியே உட்கார்ந்து தப்பளம் போட்டாள். தண்ணீர் அவளுடைய முகத்தில் தலையில் உடம்பெங்கும் தெறித்தது. அப்படியே வெளியேயும்

மழைத்துளிகளைப் போலத் தெறித்தது. உம்மா வந்து கூட்டிக்கொண்டு போனாள். நஸ்ரியா இப்போது எல்.கே.ஜி. போகிறாள். பள்ளிக்கூடம் போவதுக்கு முன்னால் தான் இந்தத்தோட்ட வேலை எல்லாம் நடக்கிறது. நாலைந்து நாட்கள் கழித்து குயிலக்காவின் குரலைக் கேட்டு தோட்டத்துக்குப் போன நஸ்ரியா அன்றும் பார்க்கவில்லை. எப்படி பார்ப்பது? என்று ஆழ்ந்த சிந்தனையில் மண்ணில் உட்கார்ந்த நஸ்ரியா அப்போதுதான் கவனித்தாள். அவளுக்கு அருகில் ஒரு சிறு வேப்பஞ்செடி இரண்டு இலைகள் விட்டு விதைப்பருப்போடு எழுந்து நின்று கொண்டிருந்தது. அவளுடைய குட்டி விரல்களால் அதைத் தடவிக் கொடுத்தாள். மகிழ்ச்சி. அவளுக்குச் சிரிப்பு வந்தது. கெக்கே கெக்க்கே என்று சிரித்தாள். கீழே உருண்டு புரண்டு சிரித்தாள். திரும்பத் திரும்ப அந்த குட்டிச்செடியைப் பார்த்துச் சிரித்தாள்.

நஸ்ரியாவின் சிரிப்பைப் பார்த்த அந்தக்குட்டி வேப்பமரமும் காற்றில் தலையாட்டிச் சிரித்தது..

# 9. வானவில் தேவதைகளின் பாடம்

-செப்டம்பர் 15, 2019

பூவனூர் முழுவதும் பூந்தோட்டங்கள் இருந்தன. அந்தப் பூந்தோட்டங்களில் உலகில் உள்ள எல்லா மலர்களும் பூத்துக்குலுங்கின. முல்லை, மல்லிகை, பிச்சிப்பூ, அடுக்குமல்லி, குண்டுமல்லி, ரோஜா, மஞ்சள் ரோஜா, சிவப்பு ரோஜா, வெள்ளை ரோஜா, காந்தள், செங்காந்தள், அல்லி, தாமரை, ஆம்பல், லில்லி, டூலிப், கோழிக்கொண்டை, நந்தியாவட்டை, அரளி, செவ்வரளி, தங்க அரளி, அலமெண்டா, சாமந்தி, வெண்சாமந்தி, மரிக்கொழுந்து, சம்பங்கி, கனகாம்பரம், டிசம்பர் பூ, என்று உலகின் பூக்கள் எல்லாம் அங்கே

இருந்தன. அங்கே எப்போதும் வண்டுகளின் பாடல்களும், வண்ணத்துப்பூச்சிகளின் சிறகடிப்பும், தேனீக்களின் ரீங்காரமும், பூச்சிகளின் சலம்பலும், தேன்சிட்டுகளின் ட்வீட்டொலியும், தையல்சிட்டின் கீச்சொலி யும் கேட்டுக் கொண்டேயிருந்தது. பகலில் எல்லாப்பூந்தோட்டத்துக்கும் வான வில்லின் வண்ணங்களில் தேவதைகள் வருவார்கள். ஊதா நிறத்தேவதை, கருநீல நிறத்தேவதை, நீலநிறத்தேவதை, பச்சை நிறத்தேவதை, மஞ்சள் நிறத்தேவதை, செம்மஞ்சள் நிறத்தேவதை, சிவப்பு நிறத்தேவதை, எல்லோரும் பகல் முழுவ தும் பூக்களோடு, தேனீக்களோடு, தேன்சிட்டு களோடு, வண்ணத்துப்பூச்சிகளோடு, வண்டுகளோடு, விளையாடுவார்கள். இரவானதும் தங்களுடைய வீடான அடர்ந்த வனத்துக்குப் போய் விடுவார்கள். அங்கே இயற்கையன்னை அவர்களுக்காகக் காத்திருப்பாள்.

ஒருநாள் மதியம் ஒரு பூந்தோட்டத்தில் எல்லாத்தேவதைகளும் மகிழ்ச்சியாகப் பேசிச் சிரித்துக் கொண்டிருந்த போது தோட்டத்தின் ஒரு மூலையிலிருந்து லேசான அழுகைச் சத்தம் கேட்டது. உடனே தேவதைகள் அந்த இடத்தை நோக்கி தங்களுடைய வண்ணச்சிறகுகளை விரித்து பறந்து சென்றனர். மல்லிகைப்பந்தலுக்குக் கீழே ஒரு சிறுமி உட்கார்ந்திருந்தாள். அவளுக்கு அருகில் புத்தகப்பை இருந்தது. அவள் யூனிபார்ம் போட்டிருந்தாள். அவள் கண்களில் இருந்து கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது. எல்லோரும் அவளைச் சுற்றிப் பறந்து கொண்டே ‘என்ன? என்ன? யாரும்மா நீ என்னாச்சும்மா?’ என்று கேட்டார்கள். அந்தச்சிறுமி, ‘ம்ம்ம் எம்பேரு மலர்விழி.. கணக்குப்பாடம் எழுதல.. டீச்சர் அடிப்பாங்க. பள்ளிக்கூடம் போகப்பயமாருக்கு.’

என்று தேம்பினாள். ஊதா நிறத்தேவதை அவளுடைய கண்ணீரைத் துடைத்தாள். கருநீலநிறத்தேவதை கலைந்திருந்த அவளுடைய தலைமுடியைக் கோதி விட்டாள். நீலநிறத்தேவதை கீழே கிடந்த அவளுடைய பையை எடுத்து தூசி தட்டினாள். பச்சை நிறத்தேவதை அவளுக்குக் குடிக்கத்தண்ணீர் கொடுத்தாள். மஞ்சள் நிறத்தேவதை அவளுடைய கணக்கு நோட்டை எடுத்து கணக்குகளைப் பார்த்தாள். செம்மஞ்சள் நிறத்தேவதை அவளுடைய தலையில் ஒரு ரோஜாவைச் சூடினாள். சிவப்பு நிறத்தேவதை காற்றில் கை வீசி மலர்விழி சாப்பிடுவதற்காகத் தின்பண்டங்களைக் கொண்டு வந்தாள்.

தின்பண்டங்களைப் பார்த்ததும் மலர்விழி தேம்புவதை நிறுத்தினாள். அவளுக்கு முன்னே அதிரசம், முறுக்கு, பொரி உருண்டை, பொரிவிளங்காய், முந்திரிக்கொத்து, சேவு,

கருப்பட்டி மிட்டாய், தேன் மிட்டாய், எல்லாம் இருந்தன. மலர்விழி கருப்பட்டி மிட்டாயை எடுத்துச் சுவைத்தாள். முறுக்கை ஒரு கடி கடித்தாள். திடீரென பள்ளிக்கூட ஞாபகம் வந்து முகத்தைச் சுளித்துத் தேம்பினாள். மஞ்சள் நிறத்தேவதை மலர்விழியின் தலையைத் தடவிக் கொடுத்துக் கொண்டே, ‘மலர்விழி ஏம்மா கணக்கு போடலை..’ என்று கேட்டாள். அதைக் கேட்டதும் அழுகை அதிகமானது. அழுது கொண்டே,

‘எனக்கு கணக்கு வரமாட்டேங்கு…’ ‘டீச்சர்ட்ட கேட்டியா..’ ‘கேட்டா அடிக்கிறாங்க..’ ‘நான் சொல்லித்தரட்டா..’ ‘ம்ம்ம் பள்ளிக்கூடம் போகாட்டி நாளைக்கு அம்மாவுக்கு மெசேஜ் போயிரும்…’ என்று மறுபடியும் அழ ஆரம்பித்தாள்.

‘அவ்வளவுதானே நீ போகும்வரை பள்ளிக்கூடம் நடக்காது..’ என்று சொல்லி

ஒரு சொடக்கு போட்டாள். பள்ளிக்கூடத்தில் மத்தியான வகுப்புக்கு மணியடிக்கவில்லை. கணக்கு டீச்சர் மணியடிப்பதற்காக காத்துக் கொண்டிருந்தார். ஆனால் காலம் நகரவே இல்லை. பிள்ளைகள் மணியடிக்காததால் மகிழ்ச்சியாக விளையாடிக் கொண்டிருந்தார்கள். மலர்விழி கணக்குப்பாடத்தை மஞ்சள் நிறத்தேவதையிடம் கேட்டுக் கேட்டுப் போட்டாள். மஞ்சள் நிறத்தேவதை அவளிடம், 'வீட்டில சொல்லிக் கொடுக்க யாரும் இல்லையா' என்று கேட்டாள். மலர்விழி, 'அப்பா கொத்தனார் வேலைக்குப் போயிருவாங்க.. அம்மா நூறு நாள் வேலைக்குப் போயிருவாங்க... வீட்டுக்கு வந்து சமைச்சு சாப்பிட்டு தூங்கிருவாங்க... யார் இருக்கா எனக்குச் சொல்லித்தர...'

என்று சிணுங்கினாள். மஞ்சள் நிறத்தேவதை அவளுடைய முகத்தைக் கையில் ஏந்தி 'இனிமேல் உனக்கு நாங்க சொல்லித்தாரோம்...' என்றாள்.

உடனே மற்ற தேவதைகளும் ‘ஆமாம் மலர்விழி ஆமாம்..’ என்று சேர்ந்து சொன்னார்கள். ‘அப்ப பள்ளிக்கூடத்துக்கு?’ என்றாள் மலர்விழி. உடனே மஞ்சள் நிறத்தேவதை திரும்பிப்பார்த்தாள். பச்சை நிறத்தேவதை பறந்து போனாள். பள்ளிக்கூடத்தில் மணியடித்தது. பச்சை நிறத்தேவதை அங்கே பள்ளிக்கூடத்தில் மலர்விழியாக உட்கார்ந்திருந்தாள். கணக்கு டீச்சர் பாடம் நடத்திக் கொண்டிருந்தார். வகுப்பில் நுழையும்போது மலர்விழி இருக்கையில் இல்லை. இப்போது பார்த்தால் உட்கார்ந்திருக்கிறாள். ஒருவேளை நாம் தான் சரியாகக் கவனிக்கவில்லையோ. என்று நினைத்தாள். டீச்சர் கரும்பலகையில் எழுதும் கணக்குகளை நொடிக்குள் எழுதி விடை சொன்னாள் மலர்விழி. டீச்சருக்கு ஆச்சரியமாக இருந்தது. அங்கே பூந்தோட்டத்தில் எல்லாத்தேவதைகளும் மலர்விழிக்குத்

தெரியாததை எல்லாம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள்.

கணக்குப்பாடத்தை மஞ்சள் நிறத்தேவதை சொல்லிக் கொடுத்தாள். அறிவியல் பாடத்தை சிவப்பு நிறத்தேவதை சொல்லிக்கொடுத்தாள். தமிழ்ப்பாடத்தை கருநீலத் தேவதை சொல்லிக்கொடுத்தாள். ஆங்கிலத்தை ஊதா நிறத்தேவதை சொல்லிக்கொடுத்தாள். புவியியலை செம்மஞ்சள் நிறத்தேவதை சொல்லிக்கொடுத்தாள் வரலாறுப்பாடத்தை நீல நிறத்தேவதை சொல்லிக் கொடுத்தாள் எல்லோரும் பொறுமையாக மலர்விழி எத்தனை தடவை கேட்டாலும் அன்பாகச் சொல்லிக் கொடுத்தனர். கதைகள் மூலம் சொல்லிக்கொடுத்தனர். விளையாட்டுகள் மூலம் சொல்லிக்கொடுத்தனர். பாடல்கள் மூலம் சொல்லிக்கொடுத்தனர். மலர்விழிக்கு

பளிச்சென்று எல்லாம் புரிந்தது. எல்லாப்பாடங்களையும் சந்தேகம் இல்லாமல் கேட்டுத் தெரிந்து கொண்டாள். நேரம் இருட்டிக் கொண்டு வந்தது. மலர்விழிக்கு தேவதைகளைப் பிரிய மனமில்லை. வானவில் தேவதைகள் தங்களுடைய ஆடையிலிருந்து ஒரு நூலை எடுத்து மலர்விழியின் புத்தகப்பைக்குள் வைத்தனர்.

‘எப்போ உனக்கு எந்தப்பாடத்தில சந்தேகம் வந்தாலும் நூலை எடுத்து கையில் வைத்துக் கொண்டு எங்களை நினைச்சா நாங்க வந்து சொல்லித்தாரோம்....’ என்று சொல்லி பறந்து போனார்கள். நேரம் இருட்டிக் கொண்டு வந்தது. அம்மா தேடிக் கொண்டு எதிரே வந்தாள். ‘எங்கடி போயிருந்தே இவ்வள நேரம்? நான் எங்கேல்லாம் தேடிட்டுருக்கேன்..’ ‘நான் தேவதைங்ககிட்ட பாடம் படிச்சிட்டு வாரேன்..’ என்று சொன்னாள். ‘என்னது தேவதையா?’ ‘இல்லை இல்லை... ஏழு டீச்சர்கிட்ட..’

என்று சொல்லிச்சிரித்தாள் மலர்விழி. அவள் சிரிப்பில் வானவில் ஒளிர்ந்தது.

# 10. விடை தெரியாத வினாக்கள் - பழனி சோ.முத்துமாணிக்கம்

-செப்டம்பர் 29, 2019

கண்ணப்பனின் கண்கள் கோவைப்பழம்போலச் சிவந்திருந்தன. கைகால்கள் கிடுகிடுவென்று நடுங்கிக் கொண்டிருந்தன. எதிரே அப்பா நின்று கொண்டிருந்தார் கையில் ஒரு குச்சியோடு. அவனுடைய அப்பாவுக்கு எல்லாம் ஒழுங்காக இருக்கவேண்டும். குறித்த நேரத்தில் பள்ளிக்குச் சென்றாக வேண்டும். பள்ளி விட்ட உடனே நேராக வீடு திரும்பியாக வேண்டும்.தேவையில்லாமல்

நண்பர்களோடு ஊரைச் சுற்றக் கூடாது. பள்ளி மைதானத்தில் விளையாடிவிட்டு வீட்டுக்கு வர நேரம் அதிகம் ஆகுமென்றால் முன்கூட்டியே சொல்லிவிட்டுப் போகவேண்டும். அளவுக்குமேல் மகன்மேல் பாசம் வைத்திருந்தார்.அதுவே கண்ணப்பனுக்குச் சில நேரங்களில் எரிச்சலைத் தந்தது. அப்பாவுக்குத் தெரியாமல் எதையும் செய்யமுடியாது. அப்பாவின் சொல்லை மீறினால்.. மீறித்தான் பார்ப்போமே..கூடப் படிக்கிற நண்பர்கள் எந்தவிதக் கட்டுக்காவலும் இல்லாமல் விளையாடவும் சேர்ந்து சுற்றவும் எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கிறார்கள் என்று கண்ணப்பன் மனதுக்குள் ஒரு ஏக்கம் சூடு ஆறிப்போன பாலின்மேல் படரும் ஆடைபோல் மிதந்துகொண்டு இருந்தது.

அப்பாவின் சொல்லை மீறிப் போனதை அவ்வளவு சீக்கிரம் கண்டுபிடித்து விடுவார் என்று

கண்ணப்பன் கொஞ்சம்கூட எதிர்பார்க்கவில்லை. ‘ஏண்டா.. இப்பிடிச் செஞ்சே’ கண்ணப்பனுடைய அப்பாவின் குரல். இவனே எதிர்பாராமல் நடந்தது இது. என்ன விடை சொல்வது எனத்தெரியாமல் விழித்துக் கொண்டிருந்தான். ஏதாவது சமாதானம் சொல்வதற்காகப் பொய் சொன்னால் அதையும் கண்டுபிடித்துவிடுவார். எனவே வாய் திறக்காமல் இருப்பது மிகவும் நல்லது. அவருடைய அனுபவத்தில் எத்தனை நிகழ்ச்சிகளைப் பார்த்திருப்பார். ‘பள்ளிகொடத்துக்குப் படிக்க அனுப்பிச்சா, உன்ன யாருடா மாந்தோப்புப் பக்கம் போகச் சொன்னது”அப்பா..அப்பா.. சாப்பாட்டுக்கு விட்ட நேரத்தில ஏங்கூடப் படிக்கற பையங்களோட கொஞ்சநேரம் வெளயாடலாம்னுட்டுப் போனேன்ம்ப்பா. நாங்கூட மொதல்ல வரலேன்னுதான் சொல்லிப் பாத்தேன். அவுனுக விடமாட்டேன்னுட்டாங்கப்பா.. அட.. அட..

சரீ....வெளயாடீட்டு வரவேண்டீதுதானே.ஓன் நொட்டாங்கையை சும்மா வச்சுக்கிட்டு வரவேண்டியதுதாண்டா கழுதை.காச்ச மரத்துல ஒன்னை யாரு கல்லெறியச் சொன்னாங்க. அப்பா.. நெறய்ய மாம்பழம்ப்பா..தொங்குச்ச்சா.. எல்லாப் பசங்களும் கல்லெறிஞ்சாங்க.. அதனால நானும் கல்லெறிஞ்சு ஒரு மாம்பழம் தாம்ப்பா எடுத்தேன். அடரா.. படவா.. தோப்பு என்ன ஒன்னோட அப்பன் வீட்டுச் சொத்தா.. அடுத்தவங்க பொருளக் கேக்காம எடுத்தா.. அதுக்குப் பேரென்னடா.. அதுக்குப் பேர்..அதுக்குப்பேரு.. கண்ணப்பன் அழுது கொண்டே பேசினான். அதுக்குப் பேர் திருட்டுடா..திருட்டு. அப்பிடிச் செய்யலாமா..சொல்லு. தப்புத்தாம்ப்பா.. இனிமேலு இப்பிடிச் செய்யமாட்டேன்பா.

இதுதான் கடேசி.. ஆமா..மறுபடி ஒருக்கா இப்பிடி நடந்தேன்னு வச்சுக்க..

நடக்கிறதே வேற. அன்று இரவு அம்மா எவ்வளவு கெஞ்சியும் சாப்பிடாமலேயே படுத்துவிட்டான் கண்ணப்பன்.மகனைத் திட்டிவிட்டோமே.இளங்கன்றுதானே.. வெளயாட்டாச் செஞ்சுருக்கான். அந்தத் தோப்புப் பருவகாரர் வந்து புகார் சொல்லும்போது நாம தலைகுனிஞ்சு நிக்கவேண்டி இருக்கே. சின்ன வயசுல நாமும் இப்பிடித்தேன இருந்திருப்போம். அந்தக்காலத்துல கம்பங்காடு, சோழக்காட்டு வழியாப் போகும்போது ரெண்டு கதிர ஒடிச்சுக் கையாலயே தேச்சு வாயில போடுவோம். காட்டுக்காரவுகளும் பெருந்தம்மையா ஒன்னும் சொல்லமாட்டங்க. எந்த மாந்தோப்புக்குள்ளும் எந்தக் கரும்பு வயலுக்குள்ளும் போலாம்.ஆரும் தப்பா நெனச்சுக்க மாட்டாங்க. இப்ப அப்பிடியா? காலம் மாறிடுச்சு. எல்லாத்துக்கும் கணக்குப் பாக்கற காலமாப் போச்சு. என்று பலவிதமாக

எண்ணிக் கொண்டு கண்ணப்பனின் அப்பாவும் தூங்கவில்லை. ‘கண்ணு.. எந்திரிப்பா.. அப்பா ஓன் நல்லதுக்குத் தான திட்டினன். சரி.. சாப்பிட்டுட்டுத் தூங்குப்பா.’ அப்பாவின் இதமான பேச்சைக்கேட்டுக் கண்விழித்தான். அம்மா இவனுக்காகச் சாப்பாட்டை எடுத்துவைத்துக் கொண்டு வந்தார். கண்ணப்பன் அழுதுகொண்டே சாப்பிட்டான்.அப்பா தூங்கிவிட்டாரா என்று பார்த்துக் கொண்டான். ‘அம்மா.. எனக்கொரு சந்தேகம்’... தயங்கிக் கொண்டே கேட்டான் கண்ணப்பன். என்னடா செல்லம் ஏம்மா.. அடுத்தவங்க பொருள அவுங்ககிட்டக் கேக்காமலோ அவுங்களுக்குத் தெரியாமலோ எடுத்தா அது தப்புத்தான..

ஆமடா கண்ணு.. அதுல என்ன சந்தேகம். அப்ப... இந்தப் பாலு இருக்கல்ல பாலு.. பசுமாட்டுப் பாலு.. அதோட கன்னுக்குட்டிக்கான

பால நாம எடுத்துக்கறோமே.. அதக் கேட்டா எடுக்கறோம்? அம்மாவுக்கு என்ன விடை சொல்வதென்றே தெரியவில்லை.அவன் கேட்பது சரிதானே. அப்பறம்.. இந்தத் தேன் இருக்கல்லம்மா.. தேனீயக் கேட்டா மனுசங்க எடுக்கறாங்க..கூட்டைப் பிச்சு தேனீக்களை வெரட்டீட்டுத் தான தேனெடுக்கறம்.அதுவும் சரியாம்மா? நாம கோழி வளத்துறோம்ல.. கோழி போடற முட்டையை அது அடைகாக்க விடாம எடுத்து எனக்குப் பொறிச்சுத் தருவீல்ல.. கோழியைக் கேட்டா எடுக்கிறீங்க.. அது வந்துடா.. நாம சாப்பிடறதுக்காகத் தான எல்லாமே.. அதெப்பிடீம்மா சரியாகும்? தூங்காமல் கேட்டுக் கொண்டிருந்த கண்ணப்பனின் வினாக்களுக்கு விடையைத் தேடிக் கொண்டிருக்கிறார்.

# 11. எனக்கென்ன குறைச்சல்? - பழனி சோ.முத்துமாணிக்கம்

-அக்டோபர் 13, 2019

விர்.. விர்.. என்று அடித்த காற்றில், மூங்கில் மரங்களில் கருவண்டுகள் துளைத்த ஓட்டைகள் வழியாக வந்த கூகூ.... உய்ய்.. உய்ய் என்ற ஒலிக்கோவை தூங்கிக் கொண்டிருந்த என்னை எழுப்பிவிட்டது. அமைதியான சூழல்.வரதமாநதி அணைக்குத் தண்ணீர்வரும் ஓடைக்கரையில் உட்கார்ந்து எழுதிக் கொண்டிருந்தவன் என்னை மறந்து தூங்கி இருக்கிறேன். வரையாடுகளும் புள்ளிமான்களும் அங்கும் இங்குமாக ஓடிக்கொண்டிருந்தன. பழனிமலைத் தொடரையே அதிரவைத்துக் கொண்டிருந்தன மயில்கள் தன்

உரத்த அகவல்களால். தெற்குத் திசையில் குழந்தைகள் ஒருவர் பின் ஒருவர் சட்டையைப் பிடித்துக் கொண்டு ஓடி விளையாடுவது போல் மேற்குத் தொடர்ச்சி மலை நீண்டு வளர்ந்து, நெளிந்து, வளைந்து போய்க் கொண்டிருக்கிறது. இங்கிருந்து பார்க்கும்போது கொடைக்கானல் குறிஞ்சி ஆண்டவர் கோவில் அழகாகத் தெரிகிறது. ‘ல’ என்ற எழுத்தைப்போல் வளைந்து செல்லும் மலைப்பாதையைப் பார்த்துக் கொண்டே இருக்கலாம்போல் இருக்கிறது. இங்கே எத்தனை ‘ல’ க்கள் இருக்கின்றன என ஆழ்மனம் கணக்குப் போட்டுக் கொண்டிருக்கிறது.

அப்போதுதான் ஓர் அதிர்ச்சி ஏற்பட்டது எனக்கு. தும்பிக்கையைத் தூக்கிகொண்டு யானை ஒன்று வந்துகொண்டிருந்தது. ஒற்றையானையிடம் எச்சரிக்கையாக இருக்கவேண்டும் எனக் கேள்விப்பட்டிருக்கிறேன். கடந்த மாதம்

மலையடிவாரத்தில் சட்டப்பாறை வனத்தில் காவலுக்கிருந்த பெரியவர் ஒருவரை யானை மிதித்துக் கொன்றுவிட்டது. சரி தப்பிக்க வழி பார்க்க வேண்டுமே என்று ஓடத் தொடங்கினேன். யானையின் பிளிறல் கேட்டது. ’ஐயா நில்லுங்க.. ஓடாதீங்க.. நான் ஒன்னும் செய்யமாட்டேன். சாப்பிடறதுக்கு தென்னங் குருத்தோ கரும்புச் சோகையோ கெடைக்காதான்னுட்டு, நான் அலஞ்சுக்கிட்டு வர்றேன்” என்றது. வேறு வழியில்லை. நம்பித்தான் ஆக வேண்டும். சொன்ன வாக்குறுதிகளை மனிதர்கள்தான் காப்பாற்றுவதில்லை. மிருகங்களையாவது ஓரளவு நம்பலாம். கொஞ்சம் துணிச்சல் வந்தது. இருந்தாலும் பார்த்தசாரதி கோயிலில், பலநாள் பழகிய பாரதியாரையே மிதித்த யானை மனதிற்குள் வந்து அச்சுறுத்திக் கொண்டு இருந்தது. அச்சமில்லை.. அச்சமில்லை..என்று

சொல்லிக்கொண்டேன்.

என்ன ஆனையப்பா.. வனத்துக்குள்ள கெடைக்காத தீனியா இங்க கெடைக்கப் போகுது?

வனத்தை எங்கேப்பா விட்டுவக்கிறீங்க..ஒசர ஒசரமாய் இருக்கற அம்புட்டு மரங்களையும் வெட்டி வெறகாக்கி வித்துத் தின்னுபோடறீங்க. நாங்க நடமாடற வழிகளயே அடச்சி, மாளிகை, ஆசிரமம்னு மறிச்சுக் கட்டீர்றீங்க. சட்டமாவது விட்டமாவது.. எல்லாத்தையும் ஒடச்சிர்றீங்களே. ஆனையப்பா.. அதெல்லாம் பெரிய எடத்து வெவகாரம். நாங்க எதுத்துப் பேசினா, தேசத் துரோகின்னு பட்டம் கட்டி ஓரம் கட்டீருவாங்க.. இந்த மண்ணுமேல அக்கறை இருக்கறவங்க தொடர்ந்து மரங்கள நட்டுக்கிட்டுத் தான் இருக்காங்க.

அட.. நிறுத்துங்கப்பா.. வருசா வருசம் நட்டகுழியிலேயே மரம் நடுவீங்களே, அதச்

சொல்றிங்களா?

எல்லாம் ஒனக்குத் தெரியும். உம்மையா ஒழைக்கறவன் ஊருக்குப் பத்துப்பேர் இருப்பாங்கள்ள.. அதனால மரம்நடறத விடாமச் செய்துக்கிட்டு இருக்கறவங்களையும் பாக்கலாம்.சாமி பேரைச் சொல்லி மரங்கள வெட்டிச்சாச்சவனே இப்ப, மரம்நடலாம் எல்லாம் வாங்கன்னு வெளம்பரம் பண்ணிட்டுத் திரியறான். சரியப்பா.. என்னமோ செஞ்சுட்டுப் போங்க. ஏன் எடத்துல வந்து நீங்க நின்னுட்டீங்க. அப்ப எரைதேடி நீங்க இருக்கற எடத்துக்குத் தான நாங்க வந்தாகணும். அப்பிடி வந்துட்டா நீங்க செய்யற கூத்து இருக்கே.. அப்பபப்பப்பா..

ஆனையப்பா.. நாங்க கூத்தா நடத்திக்கிட்டு இருக்கோம்?

தும்பிக்கையை மேலுயர்த்திய யானை

ஒருமுறை பிளிறிக் கொண்டது. என்னைப் பார்த்து ஏளனமாகச் சிரித்ததுபோல் இருந்தது. பிறகு கோபமாகப் பேசத் தொடங்கியது. ‘என்னை வெரட்டுறதுக்காகப் பட்டாசு வெடிக்கிறீங்க.தாரை தப்பட்டை அடிக்கிறீங்க. இப்ப என்னமோ எங்கள வெரட்டறதுக்குப் புதுசாக் கண்டுபுடிச்சிருக்கிறீங்க போலிருக்கு... அதாம்ப்பா.. எங்களைக் கடிக்கும் தேனீக்களின் ரீங்காரம் போலப் பதிஞ்சு வச்சுக்கிட்டு அதை நான்வரும்போது சத்தமா ஒலிபரப்புறீங்க.என்னென்னமோ செய்யுறீங்க..பசியோடு அலையறானே.. ஏதாவது குடுத்தாப் பேசாமப் போயிருவானேன்னு நெனைக்கிறீங்களா?’. எனக்குச் சுருக்கென்றது. நம் உலக நடப்புகள் அனைத்தையும் தெரிந்த யானைபோல இருக்கிறது. ஏதாவது சொல்லிச் சமாளிக்கலாம் எனப் பேசத் தொடங்கினேன். ’ஆனையப்பா, வெவரம் தெரியாமப் பேசாத..

எங்க மக்கள்ல எத்தனைபேர் பலநேரம் பட்டினிகெடக்கறாங்க தெரியுமா? மழையும் வந்து பல ஆண்டுகள் ஆச்சு. நெலமெல்லாம் வெடிச்சு வெடிச்சு பித்தவெடிப்புள்ளவன் பாதம்போல ஆயிருச்சு. மானாவாரிப் பயிராவது வெதைக்கலாம்னா எட்டுவழிச் சாலை ஒம்பதுவழிச் சாலைன்னுட்டு, அரசாங்கம் விவசாயிகள்ட்ட இருந்த காக்காணி அரைக்காணி நெலத்தையும் புடுங்குது. எங்க மக்களும் உன்ன மாதிரித்தான் வேலவெட்டி எங்காவது கெடைக்காதான்னுட்டு அலஞ்சுக்கிட்டு இருக்காங்க.. இதுல உனக்கு எப்பிடீப்பா தீவனம் கொடுக்கறது?.

தலையை ஆட்டியபடியே கேட்டுக் கொண்டிருந்த ஆனையப்பனின் சின்னஞ்சிறு கண்களில் இருந்து சொட்டுச் சொட்டாகக் கண்ணீர் வந்ததுபோல் இருந்தது. ‘மனுசங்கள மனுசங்களே ஆள்ற நாட்டுலேயே இப்பிடி வறுமையா? ஏன்

எதுத்துக் கேக்க மாட்டீகளோ?’ ஆனையப்பனின் ஆறறிவுச் சிந்தனை தென்பட்டது. ‘காட்டுல இருக்கற உனக்கே இம்புட்டுத் தெரிஞ்சா, எங்களுக்குத் தெரியாமலா போகும். எதுக்கறோம்.. எதுக்கறோம்..எதுத்துக்கிட்டுத் தான் இருக்கோம். ஒன்னும் நடந்தபாடில்லை. ரொம்ப நெருக்கிக் கேட்டா, முடிஞ்சா இங்க இரு..இல்ல வேற நாட்டுக்குப் போயிருன்றான். இல்ல.. நீ தேசவிரோதின்னு சொல்லிக் கொட்டடியில அடச்சுர்றான்.’ ‘பேசாம நீங்க எல்லோருமே எங்க காட்டுக்கே வந்திருங்களேன்’, ஆனையப்பன் சொன்னதைக் கேட்டு அதிர்ந்து போனேன்.

அந்தநேரம் பார்த்துச் சில மலைமாடுகளும் மான்களும் முயல்குட்டிகளும் ஓடிவந்து ஆனையப்பனைப் பார்த்து, ‘என்ன ஆனைமாமா ரொம்பநேரமா இந்த மனுசங்கிட்ட பேசிக்கிட்டு இருக்கீங்க?’ என்று கேட்டது. ‘ஒன்னுமில்லை

தங்கங்களா...கொஞ்சநாள்ல மனுசங்களும் நம்மளோட காட்டுக்கு வந்து தங்கப்போறாங்களாம்'. ஆனையப்பன் சொன்னதைப்பார்த்து மற்ற மிருகங்கள் சிரித்தன.. சிரித்தன..சிரித்துக் கொண்டே இருந்தன. எப்படி எல்லா மிருகங்களும் ஒன்றுக்கொன்று சண்டைபோடாமல் சேர்ந்து திரிந்துகொண்டிருக்கின்றன என்ற ஐயம் எழுந்ததைக் கேட்டே விட்டேன். 'அவரவர் உணவை அவரவரே தேடிக்கிறோம். பசிச்சாத்தான் திங்கறோம்...சரி.. சரி.. ரொம்ப நாளாக் கேக்கணும்னு நெனச்சுக்கிட்டே இருந்தேன். கேக்கவா?' ஆனையப்பன் முகத்தில் ஒரு கவலை தெரிந்தது.

'ஏங்கிட்டவா.. ஆனையப்பா.. கேளு கேளு..'

'வேறொன்னும் இல்லை.. எங்களப் பத்திக் கதை எழுதறவங்க எல்லாமே, 'ஒரு காடு இருந்தது.

அங்கே ஒரு சிங்கம் அரசனாக இருந்ததுன்னு’ எழுதறீங்களே! சிங்கத்தைவிடப் பெரியதா வலிமையா இருக்கற ஆனைங்க அரசனா வரக்கூடாதா? எனக்கென்ன கொறைச்சல்? சொல்லுங்க. சரி... என்னை விடுங்க..இந்த மலைமாடு.. புள்ளிமான்.. புலி இப்பிடி ஆராச்சும் அரசனா இருந்தா உங்களுக்குப் பொறுக்காதா? எல்லோரும் இந்நாட்டு மன்னர் என்ற வரி நினைவுக்கு வந்தது. ஆனையப்பன் கேட்டது அருமையான கேள்வி. என்ன விடைசொல்வது எனக்கொஞ்சம் தயங்கினேன். பொய்யானாலும் பொருத்தமாகச் சொல்லவேண்டும் என்று எண்ணத் தொடங்கினேன். ’ஆனையப்பா இப்பிடி எழுதறது எங்க பாட்டன் பூட்டன் காலத்துல இருந்தே பழக்கமாயிருச்சு. நாங்களும் அப்பிடியே எழுதிக்கிட்டு வர்றோம். அதுக்கும் ஏதாவது ஒரு காரணம் இருக்கும்ல.. நான் சமாளிப்பதைக்

கேட்டுப் பக்கம் வந்த அணில் கீச்கீச்சென்று நகைத்துவிட்டுப் போனது.

‘ஆனையப்பா நீ நடக்கும்போது முன்னால பாத்துப் போய்க்கிட்டே இருப்ப. ஆனா சிங்கம் நடந்துவர்றதைப் பார்த்துருக்கறயா?’.

‘ரொம்ப வெனயமாப் பேசறதா நெனப்பா? எல்லாருக்கும் மொகத்துலதான்யா கண்ணிருக்கும்.முன்னால பாக்காம முதுகுப் பக்கமா பாத்தா நடப்பாங்க?. ஆனையப்பன் செய்த எதிர்வாதத்தைக் கேட்டு மானொன்று துள்ளித் துள்ளி ஆடிச் சிரித்தது. ’அப்படி இல்ல மானே.. சிங்கம் நடந்துவரும்போது பாத்தா, நின்னு நின்னு, தான் நடந்துவந்த பாதையைத் திரும்பிப் பாத்துக்கிட்டே போகும்.இதுக்குத் தமிழ்ல ’அரிமா நோக்கு’ன்னு சொல்வாங்க. வந்த வழி சரிதானா? இல்லாட்டி வழியை மாத்தணுமான்னுட்டுத் திட்டம்

போட்டபடி நடக்கும். அப்பத்தான் கடந்த வழியில ஏதாச்சும் கொறை இருந்தா மாத்திக்கிடலாம். இப்பிடி முன் எச்சரிக்கையோட இருக்கற சிங்கத்தை, நாங்க அரசராக்கி எழுதறோம்.' என்றேன்.

ஆனையப்பன் என்பேச்சில் சமாதானம் ஆகிவிட்டானா எனப் புரியவில்லை. கொஞ்ச நேரம் அமைதியாக இருந்துவிட்டுக் காட்டுக்கே போகக் காலடி எடுத்து வைத்தது.போகும்முன் சொன்னதைக் கேட்டுத் திகைத்துப் போய் நின்றுவிட்டேன். 'நல்லாவே சமாளிக்கற.. போகட்டும்.மிருகங்களுக்குப் புத்திசொல்லிக் கதைக்கறதுக்கு முந்தி, மனுசங்களும் நடந்துவந்த பாதையிலே என்ன கோளாறுன்னு தெரிஞ்சுக்கிட்டு அடுத்த அடியைக் கவனத்தோடு எடுத்து வைங்க.'

# 12. விளையாட்டுத் தோழன் - -ſ-உ_தயசங்கர்

-அக்டோபர் 27, 2019

சசிக்குப் போரடித்தது. பள்ளிக்கூடம் விட்டு வீட்டுக்கு வந்து வெகுநேரம் ஆகிவிட்டது. அம்மா இன்னும் அலுவலகம் முடிந்து வரவில்லை. அப்பாவும் வெளியூர் போய் இருக்கிறார். வழக்கமாகவே இரண்டு பேரும் வீட்டுக்கு வர மாலை ஆறு மணிக்கு மேலாகி விடும். ஐந்தாவது வகுப்பு படிக்கும் சசி பள்ளிக்கூடம் விட்டதும் பேருந்தில் வீட்டுக்கு வந்து அவனிடம் இருக்கும் இன்னொரு சாவியால் வீட்டைத்திறந்து உள்ளே போய் பூட்டிக் கொள்வான். பையைத் தூக்கி வீசி விட்டு ஃபிரிட்ஜைத் திறந்து ஐஸ்கிரீமையோ,

சிப்ஸ் பாக்கெட்டையோ எடுத்துக்கொண்டு கம்ப்யூட்டர் முன்னால் உட்காருவான். அவன் வீட்டுக்குப் பின்னால் உள்ள தெருவில் பையன்கள் விளையாடும் சத்தம் கேட்கும். அவ்வப்போது அந்த சத்தத்தை வைத்து கிரிக்கெட், புட்பால், கபடி, எறிபந்து, கிட்டிப்புள், என்று தெரிந்து கொள்வான். இந்த விளையாட்டுகளை அவன் வேடிக்கை பார்த்திருக்கிறான். அவ்வளவுதான். அவன் விளையாண்டதில்லை. எப்போதாவது ஞாயிற்றுக்கிழமைகளில் அம்மாவிடம் அனுமதி கேட்பான். அவனுடைய உடல்நலத்தைப் பற்றி, தெருப்பையன்களின் சேட்டைகளைப் பற்றி பேசி, “வேண்டாம் சசி.. நீ வீட்டிலேயே அப்பா கூட விளையாடு..” என்று முடித்து விடுவாள். அப்பா ஒருநாளும் விளையாண்டதில்லை. அதனால் கேட்பதை சசி விட்டு விட்டான்.

அம்மாவும் அப்பாவும் வரும்வரை

சசி கம்ப்யூட்டரில் கேம்ஸ் விளையாடிக்கொண்டிருப்பான். இல்லையென்றால் தொலைக்காட்சியில் போகோ, கார்ட்டூன் நெட் ஓர்க், சுட்டி, டிவி என்று ஏதாவது ஒன்றில் அனிமேஷன் படம் பார்த்துக் கொண்டிருப்பான். இன்றும் அப்படித்தான் கம்ப்யூட்டரில் கார் ரேஸ் விளையாடினான். எவ்வளவு ஒழுங்காக ஓட்டிச் சென்றாலும் இரண்டு முறையும் அவனால் வெற்றி பெறமுடியவில்லை. அவனுக்குக் கோபம் வந்து விட்டது. அடுத்தமுறை காரை பயங்கர வேகத்தில் ஓட்டினான். பிளாட்பாரத்தில் ஏற்றினான். விளக்குக்கம்பங்களைச் சாய்த்தான். சாலையில் குறுக்கே போகிறவர்களின் மீது காரை வைத்து மோதினான். அவன் வெற்றி பெறும்வரை இதையே திரும்பத்திரும்பச் செய்தான். வெற்றி பெற்றதும் அந்த விளையாட்டு

சலித்து விட்டது. தீவிரவாதிகளை வேட்டையாடும் விளையாட்டிலும் அப்படித்தான். தீவிரவாதிகளை மட்டுமல்ல சாதாரண மக்களையும், வீடுகளையும் சுட்டான். தீவிரவாதிகளை எல்லாம் சுட்டபிறகு தான் அவனுடைய வேகம் அடங்கியது. தொலைக்காட்சியில் திரும்பத் திரும்ப பார்த்த அனிமேஷன் தொடர்களே ஒளிபரப்பாகிக் கொண்டிருந்தன. வாசலில் ஏதோ சத்தம் கேட்டது. எழுந்து போய் கம்பிக்கதவின் வழியாக வெளியே பார்த்தான். வாசல் கதவு ஆடிக்கொண்டிருந்தது. யாராவது வந்திருப்பார்களோ?

ஒரு அணில் அந்தக் கதவின் மீது ஏறி ஓடியது. கதவு ஆடியது. பின்னால் அதை விரட்டி வந்த காகம் கதவில் உட்கார்ந்தது. கதவு ஆடியது. சசிக்குச் சிரிப்பு வந்தது. அப்படியே கொஞ்சநேரம் வேடிக்கை பார்த்தான். வீட்டுக்குள் திரும்புகிற சமயம், “சசி!’’ என்று ஒரு பையனின்

குரல் கேட்டது. சசி பார்த்தான். வாசலில் ஒரு பையன் அவன் வயது தான் இருக்கும். நின்று கொண்டிருந்தான். ஒல்லியாக இருந்தான். அவனுடைய கைகள் கதவைப் பிடித்து ஆட்டிக் கொண்டிருந்தன. விளையாடிக்கொண்டிருந்த பையன் விளையாட்டைப் பாதியில் விட்டு விட்டு வந்த மாதிரி இருந்தான்."சசி விளையாட வர்றியா?'' என்று கேட்டான் அந்தப்பையன். "அம்மா வெளியே போய் விளையாடக்கூடாதுன்னு சொல்லியிருக்காங்க.." "சரி. வீட்டுக்குள்ளே விளையாடுவோம்.." சசி யோசித்தான். அந்தப் பையனை வீட்டுக்குள்ளே கூப்பிடவா வேண்டாமா? அம்மா என்ன சொல்வாள்? அப்பா திட்டுவாரா? அந்தப் பையனை அவன் பார்த்தது கூட இல்லை. அந்தப் பையனை மட்டுமில்லை. அவன் வகுப்பில் படிக்கும் பையன்களைத் தவிர வேறு யாரையும் அவனுக்குத் தெரியாது. கொஞ்சநேரம் அப்படியே

நின்று கொண்டிருந்தவன் திரும்பி உள்ளே போய் சாவியை எடுக்கப்போனான். சாவியை எடுத்துக் கொண்டு திரும்பி வந்து பார்த்தால் அந்தப்பையன் வீட்டுக்குள் இருந்தான். ”எப்படி வந்தே?’’ என்று கேட்க நினைப்பதற்குள் அவன்

“எங்கேன்னாலும் நான் வந்துருவேன்.. குமாரா கொக்கா? சரி கண்ணாமூச்சி விளையாடலாமா? செஸ் விளையாடலாமா? கேரம் விளையாடலாமா?’’ என்று அடுக்கினான். சசி ஆச்சரியத்துடன் அவனைப் பார்த்துக் கொண்டிருந்தான். அவனை தெரிந்த மாதிரியும் இருந்தது. தெரியாத மாதிரியும் இருந்தது. குமாரும் சசியும் கண்ணாமூச்சி விளையாடினார்கள். குமார் சசியைச் சுலபமாகக் கண்டுபிடித்தான். ஆனால் சசியால் அவனுடைய வீட்டில் ஒளிந்திருந்த குமாரைக் கண்டுபிடிக்க முடியவில்லை. சசியின் முகம் வாடுகிற மாதிரி இருக்கும்போதெல்லாம் குமாரே முன்னால் வந்து

அவுட்டாகி விடுவான். கேரம் விளையாண்டார்கள். அதில் சசி தான் ஜெயித்துக் கொண்டேயிருந்தான். ஒரு தடவை கூட குமாரால் ஜெயிக்க முடியவில்லை. ஆனால் குமார் அசராமல்”அடுத்த ஆட்டம் பாரேன்.. நான் தான் ஜெயிக்கிறேன்..’’ என்று சொல்லுவான். அப்படித்தான் செஸ்ஸிலும். குமார் ஒரு தடவை செக்மேட் வைத்தால் சசி ஒரு தடவை செக்மேட் வைப்பான். கலகலவென பேசிக்கொண்டேயிருந்தான் குமார். சசி கெக்கேபிக்கே என்று சிரித்துக் கொண்டேயிருந்தான். அதுவும் அவனுடைய பள்ளிக்கூடத்தில் நடந்த காமெடிகள்! அப்பப்பா? சசிக்கு மனதும் உடலும் மிதந்தது. அவன் குமாரிடம், “தினமும் நீ வா! நாம விளையாடலாம்..” என்றான். குமார் அவனைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே, ”உங்க அப்பா அம்மா ஒண்ணும் சொல்லமாட்டாங்களா?’’ என்று கேட்டான்.

அதைக்கேட்டதும் சசிக்கு அப்பா அம்மா ஞாபகம் வந்து விட்டது.

வாசலில் கதவு திறக்கும் சத்தம் கேட்டது. சசிக்கு பயம் வந்து விட்டது. குமாரை வீட்டுக்குள் கூட்டி வந்து விளையாடியதற்கு அம்மா திட்டுவார்களோ என்று யோசித்தான். பூட்டிய கதவைத் திறப்பதற்கு சாவியை எடுத்துக் கொண்டு ஓடினான். அம்மா உள்ளே வந்ததும் சசி, “அம்மா.. ஒரு விஷயம் சொல்வேன்.. நீங்க திட்டக்கூடாது..” “என்னடா செல்லம்!’’ என்று சொல்லியபடியே அம்மா ஹாலுக்கு வந்தாள். அவள் பின்னாலே வந்த சசிக்கு ஆச்சரியமாக இருந்தது. குமாரைக் காணவில்லை. அவன் அடுக்களை, படுக்கையறை, சாமான்கள் அறை, கழிப்பறை என்று எல்லா இடங்களிலும் போய் பார்த்து விட்டு வந்தான். ஒவ்வொரு இடத்திலும் போய் குமார் குமார் என்று மெல்லிய குரலில் கிசுகிசுத்தான். குமாரைக்

காணவில்லை. எப்படிப் போயிருப்பான்? அம்மாவின் குரல்,”என்ன சேட்டை பண்ணினே! நான் திட்டமாட்டேன்.. சொல்லு..” அவன் காதுகளில் விழுந்தது. அவன் சிரித்துக் கொண்டே, “சாக்லேட் ஐஸ்கிரிமைத் தின்னுட்டேன்..” என்று சிரித்தான். அம்மாவும் சிரித்துக் கொண்டே, “உனக்குத் தானடா அது..” என்று சொன்னாள். காலையில் பள்ளிக்கூடப்பேருந்துக்காக நின்று கொண்டிருந்தபோது, தோளில் பையுடன் குமார் சாலையில் போய்க்கொண்டிருந்தான். சசி அவனைப் பார்த்து, “குமார்..” என்று கத்தினான். குமார் திரும்பிப்பார்க்காமல் அவன் பாட்டுக்குப் போய்க் கொண்டிருந்தான். சசி அம்மாவிடம் எப்படியாவது கேட்டு இனிமேல் வெளியில் போய் பையன்களோடு சேர்ந்து விளையாட வேண்டும் என்று நினைத்தான்.

# 13. மீன்கள் எதைச் சாப்பிடுகின்றன? - அன்பழகன்

-நவம்பர் 3, 2019

**அறிவியல் கதை**

புதுச்சேரிக்கு அருகில் உள்ள வீராம்பட்டினம் கடற்கரைக்கு அடிக்கடி அவள் அப்பாவுடன் செல்வாள். கடல் அலையோடு எச்சரிக்கையாய் அப்பாவின் துணையோடு ஆசை தீரும்மட்டும் விளையாடி மகிழ்வாள். காலில் ஒட்டிய மணல் துகள்களைக் கூட தட்ட மனமில்லாமல் அப்படியே ஈரத்தோடு நடப்பாள். அவளின் தந்தை கரைக்கு

வரும் படகுகளைப் பார்த்த வண்ணமிருப்பார். ஒவ்வொரு படகிலும் மீனவர்கள் வலையில் சிக்கிய மீனோடு கரைக்குத் திரும்புவார்கள். அவளுக்கோ வலையில் சிக்கிய மீன்களைவிட, யாரும் கவனிக்காத சிப்பிகள், கிளிஞ்சள்கள் போன்ற சின்னச் சின்ன உயிர்ப்பொருட்களின் மீதுதான் கண் போகும். மீனவர்கள் வலையில் சிக்கிய மீன்களை எடுத்து கூடையில் அடுக்குவதிலேயே குறியாய் இருப்பார்கள். இந்த கடல் சிப்பிகள் போன்ற இதர உயிர்ப்பொருட்களை எடுத்து கீழேப் போட்டு விடுவார்கள். ஈரத்தோடு இருக்கின்ற கிளிஞ்சல்கள், சின்ன சங்குகள், சிப்பிகள், சோழிகள், நட்சத்திர மீன்கள் போன்றவற்றை எச்சரிக்கையோடு பார்த்துக்கொண்டிருப்பாள். அவசரபடாதம்மா! சிலது கையைக்கிழிச்சிடும், சிலது விஷத்தன்மையுடையதாகக் கூட இருக்கலாம் என அவளின் அப்பா

எச்சரித்துக்கொண்டே இருப்பார். அவள் தயாராய் எடுத்து வந்திருந்த டப்பாவின் மேல் மூடியால் ஒவ்வொன்றாய் கவனமாக எடுத்து பெரிய டப்பாவில் போடுவதிலேயே குறியாய் இருந்தாள்.

வலையில் சிக்கிய இந்த சின்ன உயிர்ப் பொருட்கள் கரைக்கு வரும்போது பெரும்பாலும் இறந்துபோய்தான் கிடக்கும். இவளோ அந்த சிப்பிகளைத் தொட்டுப்பார்த்தாள். அதன் அழகில் சொக்கிப்போனாள். அப்போதுதான் கவனித்தாள், அதன் வாய்களில் பாசிப்படிந்ததைப் போன்ற அழுக்குத் துகள்களை. ஒருவேளை இதைத்தான் இந்த சிப்பிகள் உணவாக உண்ணுமோ என அவளுக்குள் அடிக்கடிக் கேட்டுக்கொள்வாள். அவளின் தந்தை மீன்களை விலைபேசி வாங்குவதிலேயே குறியாய் இருந்தார். ஒருவழியாக மீன்களை வாங்கிவிட்டார். புது மீன்களை வாங்குவதில் அவருக்கு சந்தோஷம்.

மீன்குழம்பு சுவையாக இருக்கும் என்பார். சரி வீட்டிற்கு போகலாம் வா! என அவளின் தந்தை அழைக்க சைக்கிளில் கிளம்மினார்கள். அப்பா எனக்கொரு சந்தேகம், “இந்த மீன்கள், சிப்பிகள் எல்லாம் எதைச் சாப்பிடும்?” என்று ஆவலோடு கேட்டாள். இது என்ன கேள்வி! “கடல்ல கிடைக்கிறதைச் சாப்பிடும். ஒரு மீனு இன்னொரு மீனைச் சாப்பிடும். எதுக்கு இதெல்லாம் உனக்கு, போய் ஒழுங்கா தேர்வுக்கு படி!” என்று அவளை அதட்டினார். அவளுக்கோ இந்த பதிலில் திருப்தி இல்லை. யாரைக் கேட்பது என சிந்தித்தப்படியே இருந்தாள்.

வீட்டிற்கு வந்து தேர்வுக்கு படித்தாலும், இந்த கேள்வியே மீண்டும் மீண்டும் வந்துகொண்டே இருந்தது. மறுநாள் அறிவியல் ஆசிரியர் பாடம் நடத்தும்போது இந்த கேள்வியைக் கேட்டுவிட்டாள். அவர் பாடத்தை முடித்து விட்டு

வந்தார். நல்ல கேள்வி கேட்டாய்! கடலில் நிறைய உயிரினங்கள் வாழ்கின்றன. அளவில் பெரிய உயிரினங்கள் சிரிய உயிரினங்களை உண்டு வாழ்கின்றன. இப்படியாக இந்த உணவு சங்கிலி தொடர் கதையாக இருக்கும். என்று ஆசிரியர் கூற, அவளும் சரி சார் என்றபடி ஆசிரியருக்கு நன்றி சொல்லிவிட்டு வகுப்பு பாடத்தை படிக்க ஆரம்பித்தாள். ஏதோ கொஞ்சம் நெருக்கமான பதிலைச் சொல்லிவிட்டோம். இன்னும் அறிவியல் ரீதியாக சரியான பதிலை தேடவேண்டுமென ஆசிரியர் தனக்குள் சொல்லிக்கொண்டார். வீட்டிற்கு வந்ததும் சாய்வு நாற்காலியில் ஓய்வுக்காக அமர்ந்தார். எதிரே இருந்த மீன் தொட்டியில் கவனம் சென்றது. மீன்கள் அழகாய் நீந்திக்கொண்டிருந்தன. தொட்டியின் அடியில் பாசி, புற்கள் சின்ன சின்ன தாவரங்கள் அசைந்தபடியே இருந்தன. நீளமும்

வெள்ளையுமாய் உட்புறம் ஜொலித்தன. ஆனாலும் மீன்கள் எதைச் சாப்பிடும்? என அந்த மாணவி எழுப்பிய கேள்வியே அவர் மனதில் மீண்டும் மீண்டும் வந்து போனது.

அப்பொழுதுதான் ஆசிரியரின் மகள் சுவேதா ஒரு டப்பாவோடு வந்தாள். அதிலிருந்து எதையோ எடுத்து மீன் தொட்டியில் தூவினாள். மெல்ல மெல்ல அந்த உணவு உருண்டைகள் நீரில் மிதந்து உள்ளே இறங்கிக் கொண்டிருந்தன. உடனே மீன்கள் வேகமாக வந்து அந்த உணவு உருண்டையை விழுங்கத் தொடங்கின. உணவை விழுங்கிய படியே மீன்கள் மகிழ்ச்சியாய் நீந்திக்கொண்டிருந்தன. மீன்களுக்கு எதை உணவாய் கொடுக்கிறாய்?. அதில் என்ன கலந்திருக்கிறது? என ஆவலோடு தன் மகளிடம் கேட்டார்.மண்புழுக்கள், மாமிசக் கழிவுகள் போன்றவற்றை நன்கு உலர்த்தி

அதோடு கோதுமை தவிடு சேர்த்து அரைத்து பாக்கெட்டில் வைத்து கொடுக்கிறார்கள். இதையே உணவாக மீன்களுக்கு நான் தருகிறேன். சரி சரி அப்படியென்றால் கடலில் உள்ள மீன்கள் எதை உண்ணுகின்றன? என மேலும் கேட்டார். “கடலின் மேற்பரப்பில் கண்ணுக்கு புலப்படாத சின்னஞ்சிறு செடிகள், நீர்வாழ் பாசிகள், பூண்டுகள், நீரில் பிறக்கும் ஒரணுவுயிர்கள் போன்றவை நன்கு செழித்து வளரும். இவையே மீன் குஞ்சிகளுக்கு ஊட்டமிகு உணவாகும். ஆனால் இவற்றை வெறும் கண்ணால் பார்க்க முடியாது. இந்த சின்னஞ்சிரிய தாவரங்கள் சூரிய ஒளியைக் கிரகித்து வளர்கின்றன. இவற்றையே மீன்கள் உண்ணுகின்றன. மேலும் சிறிய மீன்களை பெரிய மீன்கள் உண்டு வாழ்கின்றன. இப்படி இந்த உணவு சங்கிலி போய்க்கொண்டே இருக்கும்” என ஒரு நீண்ட விளக்கத்தை அவள் கூறினாள்.

ஆசிரியருக்கோ இது மிகவும் ஆச்சரியமாக இருந்தது. நிலப்பரப்பில் கண்ணுக்கு தெரிகின்ற காடுகள் உள்ளது போல, கடலில் கண்ணுக்குத் தெரியாத இந்த தாவரங்கள் காடுகள் போல உருவாகி உள்ளதோ என எண்ணத் தோன்றியது. அவரின் மகள் ஏதோ விளையாட்டாய் மீன் தொட்டி வைத்து பொழுது போக்குகிறாள் என ஆசிரியர் நினைத்தது தவறாகிப்போனது. மேலும் ஏதாவது சந்தேகமா? என்பது போல் தன் தந்தையைப் பார்த்தாள் சுவேதா. ஆசிரியருக்கோ விடை கிடைத்ததைப் போல் இருந்தாலும், மேலும் ஒரு கேள்வியை தன் மகளிடம் கேட்க வேண்டும் போல இருந்தது. மீன் தொட்டியில் காற்றுக் குமிழ்கள் எங்கிருந்து வருகின்றன; அது எதற்காக? என பட்டென கேட்டார் ஆசிரியர். ஒ! அதுவா என்றபடி சுவேதா பேசலானாள். மீன்கள் வாழ்வதற்கு உணவு மட்டும் போதாது,

காற்றும் வேண்டுமல்லவா? அதாவது ஆக்சிஜன் வேண்டுமல்லவா? அதற்காக ஒரு சிரிய மோட்டார் மூலம் காற்று உள்ளே செலுத்தபடுகிறது. அதோடு மீன்தொட்டியின் அடியில் படியும் உணவு துகள்களும் மீன்களின் கழிவும் தொட்டியை அடைத்துக்கொள்ளாதபடி அதை வெளியேற்றவும் உதவுகிறது. அதோடு மட்டுமல்லாமல் தொட்டியில் ஒரு நீர் சுழற்சியும் நடக்கிறது என்றாள். அவளின் பதிலை அங்கீகரிப்பது போல ஆசிரியர் தலையை ஆட்டினார்.

அப்படி என்றால் கடலில் வாழும் மீன்களுக்கு ஆக்சிஜன் எங்கிருந்து வருகிறது? என மீண்டும் ஒரு கேள்வியை எழுப்பினார். அது ஒரு பெரிய கதை. சூரிய ஒளி கடலின் மேல்மட்டத்திலிருந்து சுமார் 250 அடி வரை பரவும் என்பது உங்களுக்கு தெரியுமா? இதனால் காற்றில் உள்ள ஆக்சிஜன் கடலின் மேற்பரப்பில் கரைய ஆரம்பிக்கிறது.

இதனால் கடலில் உயிரினங்கள் வாழ முடிகிறது என்றாள். அப்படியென்றால் கடலின் அடி ஆழம்வரை சில மீன்கள், உயிரினங்கள் வாழ்வதாக சொல்கிறார்களே! அது எப்படி சாத்தியம் என ஒரு எதிர் கேள்வியை ஆசிரியர் கேட்டார். சுவேதா சற்றே யோசித்து பேசலானாள். அதற்கு நீங்கள் கடலின் நீரோட்டங்கள் பற்றி தெரிந்துகொள்ள வேண்டும். அதாவது பூமியின் துருவங்களிலிருந்து கடலில் நீரோட்டங்கள் பாய்கின்றன என்பதை முதலில் கண்டு பிடித்தார்கள். அதோடு மட்டுமல்லாமல், மேற்பரப்பிலிருந்து கடலின் அடி ஆழம் நோக்கியும், அதேபோல கடலின் அடி ஆழத்திலிருந்து மேல் நோக்கியும் நீரோட்டம் பாய்வதாக கண்டுபிடித்தார்கள். இதனால் மேற்பரப்பில் தண்ணீரில் கரைந்த ஆக்சிஜன் கடலின் அடி ஆழம்வரை செல்ல முடிகிறது. கூடவே உணவு

பொருட்களும் பிற கழிவுகளும் மேலிருந்து கீழாகவும், கீழிருந்து மேலாகவும் செல்கின்றன. இந்த கடலின் சுழற்சியே உயிர்கள் தோன்றவும் வளரவும் காரணமாகின்றன என விரிவாக எடுத்துக் கூறினாள். ஆசிரியருகோ வியப்பாக இருந்தது. கடல் ஒரு உருளையைப் போல உள்ளுக்குள் உருளுகிறதா? கடலில் அலை அடிப்பதைப் வெளியிலிருந்து பார்க்கிறோம். உள்ளுக்குள் அலை அடிப்பதை எப்படி புரிந்து கொள்வது! எப்படி இருந்தாலும் உயிர்களின் மிகப்பெரிய கருவரையாக இந்த கடல் காட்சியளிக்கிறதே! இத்தனை நாள் கடலை வெறுமனே பார்த்துவிட்டோமே என உள்ளுக்குள் ஆதங்கப்பட்டார்.

ஆசிரியர் தன் மகளுக்கு நன்றி சொல்லி வாழ்த்தினார். இப்படி எதையும் அறிவியல் ரீதியாக புரிந்து வாழ வேண்டுமென வாழ்த்தினார். சுவேதா

உள்ளுக்குள் அகமகிழ்ந்து உள்ளே சென்றாள். ஆசிரியருக்கே தனது மாணவி எழுப்பிய கேள்விக்கு மிக விரிவான விடை கிடைத்துவிட்டது. அதே நேரத்தில் கடலைப்பற்றிய புதிய பார்வை அவருக்குள் உருவாகிவிட்டது. இதை தனது மாணவர்களுக்கு அழகாக எடுத்துச்சொல்ல வேண்டுமென தனக்குள் பதிந்து கொண்டார். அதோடு கடல் வெறும் உப்பு நீரல்ல அது உலகின் கருவரையாக சுழன்றுகொண்டிருக்கிறது. இதை நாம் அனைவரும் பாதுகாக்க வேண்டும். சுற்றுச்சூழலின் உயிராகப் போற்ற வேண்டும். இதை உணர்வு பூர்வமாக மாணவர்களுக்கு எடுத்துச் சொல்ல இப்பொழுதே தயாராகிவிட்டார் ஆசிரியர்.

# 14. கைகூடிய கனவு - பழனி.சோ.முத்துமாணிக்கம்

-நவம்பர் 10, 2019

பள்ளியில் இருந்து வீட்டுக்கு வந்த கன்னலுக்கு வியப்பும் அதிர்ச்சியும் ஏற்பட்டது. ‘ஓஒ..தாத்தா..எப்ப வந்தீங்க…’ என்று கேட்டபடி ஓடி வந்த பேரனைக் கட்டிப் பிடித்துக் கொண்டார் மணிமுத்து. கிராமத்தில் இருந்து தாத்தா பழனிக்கு வந்து பல ஆண்டுகள் ஆயின. ‘நா செத்தாலும் அமரர்பூண்டியை விட்டு வரமாட்டம்ப்பா. அங்க விட்டுட்டு ஒரு நாள் வந்துட்டாலும் ஆடுமாடுகளக் கெவினிக்க ஆளில்லை. வாயில்லா மக்களப் பட்டினி போடலாமா? அதுக்குமேல அம்பது தென்னம்பிள்ளைக,

பத்துக் கொய்யா மரங்க, பதனஞ்சு முருங்கை மரங்க, தக்காளி, சோளம், கீரவகைகள்னு கெடக்குதே; ஆரு மொறையாத் தண்ணி ஊத்துவா. பாட்டியால முடியாதேப்பா.அவுளுக்கும் வயசாச்சுல்ல’ என்பார்.விடுமுறைகளில் கிராமத்துக்குப் போன போதெல்லாம் கன்னலின் வேண்டுகோளைப் புறக்கணித்தவர் இப்போது வந்திருக்கிறார். ‘அப்பா.. தாத்தா வந்திருக்காரு’ அலுவலகத்திலிருந்து வீடு திரும்பிய தங்கமணியைப் பார்த்துக் கத்தினான்.அவனுடைய குரலில் கொப்பளித்த மகிழ்ச்சியைப் பார்த்தவன், ‘வாங்கப்பா..ஒருவழியா எங்க வீட்டுக்குத் தடம் தெருஞ்சுதா? அம்மா வரலியா? நீங்க மட்டும் வந்தீங்களா?’ எனக் கேட்டான்.

‘ஆமப்பா.. அம்மாவுக்கு மனசே சரியில்ல.ஊரையும் நெலத்தையும் விட்டுக் கௌம்ப மாட்டேங்கறா. என்ன செய்யறது?’

‘அப்பவே சொன்னனேப்பா.. காடுகரையவே கட்டிக்கிட்டு அங்க இருக்கவேண்டாம்.கம்மாயிலும் தண்ணியில்ல. பருவத்துக்கு வரவேண்டிய மழையும் வர்றதில்லை. தகைஞ்ச வெலைக்கு வித்தரலாம்னு எத்தனைதடவை சொன்னேன், கேட்டீங்களா?.... இப்ப உள்ளதும் போச்சே..’ தங்கமணியின் பேச்சைக் கேட்டவுடன் தலை கவிழ்ந்தார் மணிமுத்து. ‘மகன் சொல்லறதிலும் உம்மை இருக்குது.பட்டான் பூட்டன் காலத்துல இருந்து இந்த மண்ணோடவே பொறந்து, மண்ணோடவே உருண்டு பெரண்டு, வாழ்ந்து, இவன ஆளாக்கிப் படிக்கவச்சு, கண்ணாலம் செஞ்சுவச்சு..... ஈம்ம்ம்.. இந்த மண்ணை விட்டுட்டு எப்பிடிடா இருக்க முடியும்.மண்ணோட பெருமை தெரியாத நாடு மண்ணாத்தான் போகும். இத விட்டுட்டுச் சந்திரன்ல போயாச் சோறாக்கித் திங்க முடியும். இல்ல சூரியன்ல

குடித்தனம் நடத்த முடியுமா? பொசகெட்ட பயலுக..’ மணிமுத்து மனதுக்குள் புலம்பிக் கொண்டார். வேறென்ன செய்வது? ‘தாத்தா.. வெளயாடலாமா?’ ‘சரி.. கண்ணு.. ஆமா.. இந்தக் குடியிருப்புல மூணாவது மாடியில என்னத்தைடா வெளையாட முடியும்?’ என்றவருக்குப் பேரன் கிராமத்துக்கு வந்தபோதெல்லாம் அவனோடு விளையாடிய நினைவுகள் வந்து நெஞ்சைப் பிசைந்தன. வயலில் அண்ணன் தம்பி தோள்மேல் கைபோட்டு நிற்பதுபோல் இரண்டு வேப்ப மரங்கள் நின்றன. பரந்து கிடந்தது நிழல் இளம் இருட்டுப் போர்வையைப் போர்த்தியதுபோல். அதனடியில் பத்துச் செம்புலி ஆடுகள் படுத்துக் கிடந்தன. நான்கு சிறுவர்கள் கோலிக் குண்டு விளையாடிக் கொண்டிருந்தார்கள். மண்ணில் நேர்கோட்டில் மூன்று சிறு குழிகள். ஒருவன் ஒரு குழிமேல் இடதுகைப் பெருவிரலை நிலத்தில்

ஊன்றி நடுவிரலில் ஒரு கண்ணாடிக் குண்டை வைத்திருந்தான். வில்லில் இருந்து அம்பை விடுவிப்பதைப் போல் குண்டினை நடுவிரலால் இழுத்து அடுத்த குழிக்குள் போட்டான். பிறகு அதிலிருந்து மூன்றாவது குழிக்கு.. போடத் தவறியவன் வாய்ப்பை இழந்து விட்டான். அடுத்து இன்னொரு பையன். இப்படியே தொடர்ந்தது விளையாட்டு. கன்னலுக்கும் விளையாட ஆசை. ‘டேய் செல்லங்களா ஏம் பேரனையும் சேத்துக்கங்கடா வெளயாட’ என்ற மணிமுத்துவைப் பார்த்த சிறுவர்கள் ‘அதுக்கென்ன தாத்தா.. வாடா கன்னலு வெள்ளாடலாம்’ என்று அவனுக்குக் கோலிக்குண்டை எப்படி விரலால் எறிவது என்பதச் சொல்லிக் கொடுத்தார்கள்.

‘டேய்.. இது போதும்டா.. வேற வெள்ளாடலாமா?’ ஒரு சிறுவன் கேட்க எல்லோரும் சரிடா என்று சம்மதித்தார்கள்.பச்சைக் குதிரை

விளையாட்டுத் தொடங்கியது.மூன்றுபேர் குனிந்து வரிசையாக நின்றார்கள்.ஒருவன் ஓடிவந்து ஒவ்வொருவரையும் தாண்டிச் சென்றான். கன்னலுக்கும் எப்படித் தாண்டுவது என்று சொல்லிக் கொடுத்தார்கள்.ஒருமுறை கன்னல் கீழே விழுந்தான். சிறு சிராய்ப்பு கையில் ஏற்பட்டது. உடனே ஒரு சிறுவன், டேய் கையைக் காட்டு என்று சொலிவிட்டுக் கீழே கிடந்த மண்ணை எடுத்துச் சிறுகற்களை நீக்கிவிட்டுச் சிராய்ப்பின்மேல் போட்டான். கன்னலுக்கு அச்சம். ‘தாத்தா.. இந்த அண்ணன் காயத்துமேல மண்ணை அள்ளிப் போடறான்.’

‘பயப்படாதறா.. காயம் ஆறிப்போயிடும் சீக்கிரமா. இங்க மண்ணுதாண்டா எல்லாத்துக்கும் மருந்து. கன்னலுக்குக் குழப்பமா இருந்தது. இதேமாதிரி வீட்டுல நடந்திருந்தா, அப்பா டாக்டர்கிட்டக் கூட்டீட்டுப் போய், ஊசிபோட்டு,

மருந்து தடவி.. அப்பப்பா..ஒரு அய்நூறாவது செலவழிச்சிருப்பார்.நினைத்ததைத் தாத்தாவிடம் சொல்லிச் சிரித்தான். ’ஆமா கண்ணு.. உங்க அப்பா செலவழிச்சாத் தான கோடிகோடியாப் பணத்தைக் கொட்டிப் படிச்ச டாக்குட்டருக்கு வண்டி ஓடும்.’ தாத்தாவும் பேரனும் மனம்விட்டுச் சிரித்தார்கள். ‘வீட்டில் அம்மாவுடனும் அப்பாவுடனும் இப்படிப் பேசிச் சிரித்ததே இல்லையே’ என்று சிணுங்கியது கன்னலின் மனம்.

‘டேய்... கம்மாய்ல நீந்தலாமாடா .. வாங்கடா’.. ஒரு சிறுவன் கூவினான். எவரும் மறுப்புச் சொல்லாமல் சரிடா என்றது கன்னலுக்கு வியப்பாக இருந்தது. பழனிக் குடியிருப்பில் இருக்கும் சிறுவர்கள் சிலநேரம் கிரிக்கெட் விளையாடுவார்கள். இவன்போய் என்னையும் சேர்த்துக் கொள் என்றால். ‘போடா.. நாங்க ஒரு

டமாச் சேந்துட்டம்.ஒன்னைச் சேத்துக்க முடியாது’ என்பார்கள்.கன்னலுக்கு வருத்தமாக இருக்கும். ஓடிப்போன சிறுவர்கள் ஒருவர்பின் ஒருவராகக் கண்மாய்க்குள் குதித்தனர். கன்னல் கரையில் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான். தண்ணீருக்குள் மூன்றுபேர் மட்டும் தெரிந்தனர். நான்காவது பையனைக் காணவில்லை. இரண்டு நிமிடத்துக்குமேல் ஆகியும் வரக் காணோம்.திடீரென்று நடுக்கண்மாயிலிருந்து நீந்தி வந்து கொண்டிருந்தான் அவன். ‘டேய்.. எவ்வளவு நேரம் உள்நீச்சுல.. மூச்சுத் தெணறலயா’என்று அவனைக் கேட்டார்கள் மற்ற மூவர்.’ டேய்.. ஏங் கையைப் பார். அடியில மண்ணெடுத்துட்டு வந்திருக்கேன் பார்’ என்றவனைப் பார்த்து ஒரு சிறுவன் கூறினான்.’ இவனுக்கு வேற வேலயே இல்லடா’ என்றான். கன்னலுக்கு மிகுந்த வியப்பு. நகரில்

வாழும் தனக்கு இதைப்போல் அனுபவங்கள் கிடைப்பதில்லையே என்று ஏக்கமாக இருந்தது.

‘தாத்தா. எனக்கும் நீச்சல் பழக்கிவிடுங்க தாத்தா’ கெஞ்சிக் கேட்டான் கன்னல். ‘அடுத்தமொறை நீ ஊருக்கு வரும்போது சொரக்குடுக்கை வாங்கிவக்கறேன். அதை இடுப்புல கட்டிக்கிட்டா முழுகாம நீஞ்சலாம்டா செல்லம்’ என்ற தாத்தாவைக் கொஞ்சினான் கன்னல், ‘நல்ல தாத்தா’. ‘இனிமேல் பேரனை அழைத்துக் கொண்டு கிராமத்துக்குப் போய் எந்த வயலைக் காட்டுவேன். பாவம் ஏமாந்து போவானே’ என்று மணிமுத்து தமக்குள் முணுமுணுத்துக் கொண்டார். ‘என்ன ஓசனை தாத்தா.. வாங்க மாடிக்குப் போலாம். உங்களுக்கு ஒன்னு காட்டறன்’. மாடிக்குப் போய்க் கன்னல் காட்டிய காட்சியைப் பார்த்தவுடன் மணிமுத்து வியப்பின் உச்சிக்கே போய்விட்டார். என்னடா.. குட்டி வயிலே இங்க

நடந்துவந்த மாதிரி இருக்கு. என்னடா இது? எப்பிடிடா? பச்சைப் பசேலெனத் தொட்டிகளில் பயிரிட்ட காய்கறிகள், கீரை வகைகள், கருந்துளசிச் செடிகள், கருவேப்பிலை எனக் கண்ணுக்கு விருந்தாகக் கண்டவுடன் மணிமுத்து மகிழ்ச்சியின் உச்சத்துக்கே சென்று விட்டார். என்னடா கன்னல்? என்ன செஞ்சேடா? மந்திரமால்ல இருக்கு.

மந்திரம்லாம் இல்ல தாத்தா.. நான் கிராமத்துக்கு வந்தபோதெல்லாம் திரும்பி வரும்போது உங்ககிட்ட வெதையு நாத்துமா நெறைய வாங்கிக்கிட்டு வருவேன்ல..ஞாபகம் இருக்கா? எங்க பள்ளிகூடத்துல மழைவேணுமின்னா மரம் வளங்க.. மரம் வளங்கன்னு ஆசிரியர்க சொல்லிகிட்டே இருந்தாங்க. எங்க குடியிருப்புல இருக்கற பையன்கள்லாம் சேந்து முடிவெடுத்தோம். ஆளுக்குப் பத்துத் தொட்டியைக் கவனிக்க

வேண்டிய பொறுப்பு. இங்கிருந்து கீழ பாருங்க தாத்தா.. ஆமா அதென்னடா.. வாழை மரம், சப்போட்டா மரம், கொய்யா மரம், தென்னை மரம்.. எல்லாம் ஆரு வச்சது? எல்லாம் எங்க வேல தான் தாத்தா.எல்லா வீட்டுக்காரங்களும் ஆகற செலவைப் பங்கிக்கிறோம். வருமானம் வந்தாலும் பங்கு பிரிச்சுக்குவோம். சோவியத் நாட்டில் கூட்டுப் பண்ணை விவசாயம் நடப்பதை நாட்காட்டிகளில் படமாகப் பார்த்திருக்கிற தாத்தாவுக்கு, இந்தச் சிறுவர்களை எப்படிப் பாராட்டுவது என்றே தெரியவில்லை. இனிக் கன்னலைக் கிராமத்துக்கு அழைத்துப் போகவேண்டியதில்லை.அழைத்துப்போனால் மதுரை—கொச்சி நெடுஞ்சாலைக்காகத் தன் வயலையும் வீட்டையும் கையகப்படுத்திக் கொண்ட அரசாங்கம், நட்டுவைத்துப் போன அளவுகல் தூண்களைத் தானே காட்ட முடியும். கண்களில்

கண்ணீர் மெல்லக் கசிய மணிமுத்து தனக்குள் பேசிக் கொண்டார், ‘ஒரு கொம்பனாலும் இந்த மண்ணை அழிக்க முடியாது’.  கிராமத்தில் நடக்க வேண்டிய கனவு இங்கே கைகூடி இருக்கிறது. கன்னலின் குரல் உரக்கக் கேட்டது, ‘தாத்தா.. போதும் பாத்தது.. வாங்க போகலாம் வீட்டுக்கு’

# 15. சில தாவரங்கள் ஓசோனை வெளியிடுமா?

-நவம்பர் 17, 2019

அன்று சற்றுத் தாமதமாக வகுப்பிற்குச் செல்ல ஆயத்தமானர் ஆசிரியர். அதற்குள் மாணவ மாணவியர்கள் சுதந்திரமாக சப்தமிட்டு மகிழ்வார்கள். இதுவும் ஒருவகையில் நல்லதுதான். அவர்களின் மனம் சற்றே லேசாகி அமைதி அடையும். ஆசிரியர் மிக மெதுவாக வகுப்பறையை நெருங்கிவிட்டார். மாணவ மாணவியர்கள் ஒரு பாட்டை பாடிக்கொண்டிருந்தார்கள். ஆசிரியர் சற்றே நின்று காது கொடுத்துக் கேட்டார். One O Alphabet, Two O Oxygen, Three O Ozone, Come on! come

on! Susan! ஒரு ஓன்னா அல்பபெட், இரண்டு ஓன்னா ஆக்சிசன். மூனு ஓன்னா ஒசோன், ஓடிவாடா சூசன்! மாணவர்கள் தமிழிலும் ஆங்கிலத்திலும் பாடிக்கொண்டே சூசனை மையத்திற்கு இழுத்தார்கள். அதற்குள் பாட்டைக் கேட்டபடியே உள்ளே நுழைந்தார் ஆசிரியர். மாணவ மாணவியர்கள் ஓடிச்சென்று அவரவர் இடத்தில் அமர்ந்தார்கள். மெல்ல மெல்ல சப்தம் குறைந்து போனது. ஆசிரியர் சற்றே திரும்பி கரும்பலகையைப் பார்த்தார். அதில் ஒரு செடியை வரைந்திருந்தார்கள். அதிலிருந்து ஓசோன் வாயு வெளிவருவது போல O3 என செடியைச் சுற்றி எழுதியிருந்தார்கள். ஆசிரியருக்கு எதுவும் புரியவில்லை. இருந்தாலும் அதைக் காட்டிக்கொள்ளாமல், என்ன இதெல்லாம் என்று மாணவர்களைப் பார்த்துக் கேட்டார். ஒரே அமைதி. சூசன் நீ எழுந்து வெளியே வா! என்ன நடந்தது என

அன்பாகக் கேட்டார்.

சூசன் சற்றே யோசித்தபடியே பேசலானான். இன்றைக்கு சுசிலா ஆசிரியை ஒரு செய்தி சொன்னாங்க சார். ஓசோன் அடுக்கு எப்படி நம்மை பாதுகாக்கிறது என விரிவாக சொன்னாங்க சார். கூடவே அதுல ஓட்டை விழுந்துவிட்டதால், சூரியனிலிருந்து வரும் புறஊதாக்கதிர்கள் நேரடியாக உயிர்களையும் மனிதர்களையும் பாதிக்கிறது. எனவே இதை பாதுகாப்பதற்கான புதிய சிந்தனைகளை நாம் உருவாக்க வேண்டும் என ஆசிரியை கேட்டுக்கொண்டாங்க சார்!. அதனால் நம்ம பிரதிபாதான் சார் இப்படி யோசனை செய்து பாட்டா பாடிக்கிட்டு இருந்தாங்க சார். என்றான் சூசன். அப்ப சில தாவரங்கள் ஆக்சிசனுக்குப் பதிலாக ஓசோன் வாயுவை வெளியிட்டா அது மேலே போயி ஓசோன் அடுக்கை அடைத்துவிடும் என பிரதிபா

நினைக்கிறாங்க இல்லையா! ஆமாம் சார்! என்றனர் மாணவர்கள். உங்கள் சிந்தனை குழந்தைத் தனமாக இருந்தாலும் ஓசோன் அடுக்கில் விழுந்த ஓட்டையை உடனே அடைத்து விட வேண்டும் என்ற உங்கள் ஆர்வத்தை பாராட்டலாம். ஆனால் இது சாத்தியமா? என்ற கேள்வியே நம்முன் நிற்கிறது. அது சரி இது சாத்தியமா அல்லது சாத்தியமில்லையா என்பதில் நாம் தெளிவு பெற்றாக வேண்டும். சார்! துளசி செடி ஒரு நாளில் இருபது மணிநேரம் ஆக்சிஜனை வெளியிடுமாம் சார்! மீதமுள்ள நான்கு மணி நேரத்தில் ஓசோனை வெளியிடுவதாக வாட்சப்பில் ஒரு செய்தி வந்ததுசார்! இது உண்மையா சார்! என்றாள் சுவேதா.

சார் என்று எழுந்தான் சங்கரன், என்ன நீ ஒரு புதிய யோசனையைச் சொல்லப்போகிறாயா? சரி ஆரம்பி என்றார் ஆசிரியர். சார் ஆக்சிஜன்

என்பது $O_2$ ஆனால் ஓசோன் என்பது $O_3$ அப்படி இருக்கும்போது ஆக்ஜிஜனை விட எடை அதிகமுள்ள ஓசோன் எப்படிசார் மேலே போனது? என்றான் ஆச்சரியமாக. மாணவர்கள் மிக முக்கியமான கேள்விகளைக் கேட்டுவிட்டார்கள். துளசி மட்டுமல்ல எந்த தாவரமாக இருந்தாலும் சூரியஒளி இல்லாமல் எப்படி இரவில் ஒளிச்சேர்க்கை செய்ய முடியும் என்பதை நாம் சிந்தித்துப்பார்க்க வேண்டும். என்ன சுவேதா சரியா! ஓசோன் வாய்வு தான் கீழே இருக்க வேண்டும் என்கிறான் சங்கரன். ஆனால் அப்படி இருந்தால் நாமெல்லாம் உயிரோடு இருக்க முடியுமா? ஆனால் இயற்கை ஏதோ நம் மீது பாசம்கொண்டு நமக்கு சாதகமாக மாற்றி அமைத்திருக்கிறதோ என்று யோசிக்க வைத்து விட்டாய். உன் சிந்தனைக்கு வாழ்த்துக்கள். இப்படித்தான் மாணவர்கள் மிக சுதந்திரமாக

சிந்திக்க வேண்டும். சரி இதுபற்றி அப்புறம் விரிவாக பார்க்கலாம். என்று சொல்லி விட்டு அன்றைய வகுப்பு பாடத்தை எளிமையாக நடத்தி விட்டு அடுத்த வகுப்பிற்கு சென்றுவிட்டார் ஆசிரியர். மதிய உணவு இடைவேளையின் போது ஆசிரியர்கள் ஒன்றாக அமர்ந்து சாப்பிடுவது வழக்கம். வழக்கம் போல் அனைவரும் அமர்ந்து சாப்பிட்டுக்கொண்டிருந்தனர்.

மாலதி ஆசிரியையும் வந்துவிட்டார். ஆசிரியருக்கு மாணவர்கள் கேட்ட கேள்வியே மனதில் ஓடிக்கொண்டிருந்தது. மாலதி ஆசிரியருக்கு வணக்கம் சொன்னபடியே மாணவர்கள் எழுப்பிய கேள்விகளைப் பகிர்ந்துகொண்டார். ஓ அப்படியா! மாணவர்களுக்கு நீங்கள் அதிகம் சுதந்திரம் கொடுக்கிறீர்கள். நல்லது. உங்கள் முயற்சி தொடரட்டும். அப்பொழுதுதான் மாணவர்களும்

எந்த தயக்கமும் இன்றி கேள்விகள் கேட்பார்கள். நான் ஓசோன் அடுக்கைப்பற்றிப் பேசிய ஒரு சின்னச் சொற்பொழிவுக்கு நல்ல பலன் கிடைத்திருக்கிறது. ஆனாலும் சரியான விடையை நாம் கண்டுபிடித்தாக வேண்டும் என்றார் ஆசிரியை மாலதி. சூரிய வெளிச்சத்தை உள்வாங்கி தாவரங்கள் செய்கின்ற ஒளிச்சேர்க்கையில் ஆக்ஜிஜந்தான் வெளிவருகிறது என்பது எல்லோருக்கும் தெரியும். ஆனால் சில தாவரங்களில் ஒளிச்சேர்க்கையின் போது ஓசோன் வாயு வெளிவர வாய்ப்பு இருக்கிறதா என்று பேச்சைத் தொடர்ந்தார் ஆசிரியர். ஒரு சின்னத் திருத்தம், தாவரங்கள் மட்டும் ஒளிச்சேர்க்கை செய்யவில்லை. தாவரங்கலோடு சேர்ந்து கடல் மற்றும் பாறைகளில் வாழ்கின்ற பாசி இனங்களும் ஒளிச்சேர்க்கைச் செய்கின்றன. இதனால் நமது காற்று

மண்டலத்தில் நமக்குத் தேவையான ஆக்ஜிஜனை நாம் பெற்றிருக்கிறோம். நிற்க, நான் உங்கள் கேள்விக்கு வருகிறேன். இந்த ஒளிச்சேர்க்கையின் மூலம் வெளிவந்த ஆக்ஜிஜன் வாயுவில் இரண்டு ஆக்ஜிஜன் மூலக்கூறுகள் உள்ளன.

இதில் மேலும் ஒரு ஆக்ஜிஜன் மூலக்கூறு சேறும்போது ஓசோனாக மாறுகிறது. இதை ஆக்ஜிஜன் மூலக்கூறின் மறு உருவம் என்றுகூட சொல்லலாம். எனவே மாணவர்கள் சிந்தித்ததில் தவறில்லை என்றுதான் நான் சொல்வேன் என்றார் மாலதி ஆசிரியை. ஆசிரியருக்கு ஒரே வியப்பாக இருந்தது. அப்ப நேரடியாக தாவரங்கள் ஓசோனை வெளியிடாது. ஆனால் தாவரங்கள் வெளியிடும் ஆக்ஜிஜன் ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் ஓசோனாக மாறமுடியும் என்பதாக நான் கொள்ளலாமா? என்றார் ஆசிரியர். நீங்கள் புரிந்துகொண்டது ஒரு வகையில்

சரிதான். ஆனாலும் மேலும் இதைப்பற்றி நாம் விரிவாக பேசவேண்டும் என்றார் மாலதி ஆசிரியை. அதற்குள் உணவு இடைவேளை முடிந்து ஆசிரியர்கள் அவரவர் வகுப்பிற்கு செல்ல ஆரம்பித்தனர். ஆசிரியரும் மாலதி ஆசிரியைக்கு நன்றி சொல்லி விட்டு அவர் வகுப்பிற்கு சென்று விட்டார். ஆசிரியர் வீடு வந்து சேர்ந்தாலும் மாணவர்கள் எழுப்பிய கேள்விகளே அவர் மனதிற்குள் ஓடிக்கொண்டிருந்தது. அப்பொழுதுதான் கவனித்தார், ஓசோன் அடுக்கு என்ற தலைப்பில் அழகான வரைபடம் சுவரில் மாட்டப்பட்டிருந்தது. ஆசிரியர் சற்றே அந்த வரைபடத்தை கூர்ந்து கவனித்தார். அதில் நல்ல ஓசோன் கெட்ட ஓசோன் என குறிப்பிடப்பட்டிருந்தது.

அது என்ன நல்ல ஓசோன், கெட்ட ஓசோன் ஆசிரியருக்கு ஒரே குழப்பமாக இருந்தது. ஒரு

சில மாதங்களுக்கு முன்னால் நடைபெற்ற அறிவுயல் கண்காட்சியில் வைப்பதற்காக இந்த வரைபடத்தை இரவு பகலாக பாலா தயாரித்தது ஞாபகத்திற்கு வந்தது. பாலா ஆசிரியரின் தங்கச்சி மகன். அறிவியலில் ஆர்வம் உள்ளவன். எதாவது கேள்விகள் கேட்டுக்கொண்டே இருப்பான். நம்மால்தான் பதில் சொல்ல முடியாது. ஏதாவது சாக்கு போக்கு சொல்லி தப்பிக்க முயன்றாலும் விடமாட்டான். சரியான பதிலைத்தேடி ஓடிக்கொண்டே இருப்பான். ஆசிரியருக்கு அவன்மேல் கொள்ளப்பிரியம். இப்படி ஆசிரியர் பாலாவை நினைத்துக் கொண்டிருந்தபோது, பக்கத்து அறையிலிருந்து பாலா ஓடிவரும் சப்தம் கேட்டு திரும்பிப்பார்த்தார். பாலா நீ எப்ப வந்த? என கேட்டபடியே, சரி! சரி! அதை விடு! நீதானே எங்கிட்ட கேள்வி கேட்ப, இப்ப நான் உங்கிட்ட ஒரு கேள்வி கேட்க போகிறேன்

என்றார் ஆசிரியர். பாலா உடனே மகிழ்ந்து என்ன கேள்வி என்றார். இதோ சுவரில் மாட்டியுள்ள படத்தை நீதானே வரைந்தாய்! ஆமாம்! என்றான் பாலா. அது என்ன? நல்ல ஓசோன் கெட்ட ஓசோன்? எப்படி என்றார் ஆசிரியர். பாலா கொஞ்சம் கூட யோசிக்காமல் பட படவென்று பேச ஆரம்பித்தான். இப்ப இந்த வரைபடத்தைப் பாருங்க. இது பூமி இல்லையா! இப்ப இந்த பூமியைச் சுற்றி காற்றுமண்டலம் இருக்கிறதா! கொஞ்சம் மேலே பாருங்க சூரியன் இருக்கிறதா!. இப்ப சூரியனிலிருந்து ஒளிக்கதிர்கள் வந்து காற்று மண்டலத்தை முதலாவதாக தொடுகிறதா! ஆமாம்! ஆமாம்! தொடுகிறது என்றார் ஆசிரியர் ஒரு மாணவனைப்போல. பாலா மேலும் தொடர்ந்தான்.

இப்ப சூரியனிலிருந்து வரும் கதிர்களில் என்ன இருக்கும்! புறஊதாக்கதிர்கள் இருக்கும் அல்லவா! இந்த புறஊதாக்கதிர்கள் அதிக

வெப்பத்தோடு காற்று மண்டலத்தை தாக்குகிறதா! அப்படி தாக்கும் போது காற்றுமண்டலத்தில் உள்ள ஆக்ஜிசன் அணுக்கள் இரண்டாக உடைகிறது. இப்படி பிரிகிற ஆக்ஜிசன் அணுக்கள், பிரியாமல் இருக்கிற மற்ற ஆக்ஜினன் அணுக்களோடு சேர்ந்து ஓசோனாக மாறுகிறது. அந்த மட்டத்தில் அதாவது கிட்டத்தட்ட பூமியின் தரையிலிருந்து சுமார் முப்பதிலிருந்து ஐம்பது கிலோமீட்டர் உயரத்தில் வெப்பம் அதிகமாக இருப்பதால் ஆக்சிஜன் அணுக்கள் உடைவது சாத்தியமாகிறது. வினைபுரிவதும் உடனே நிகழ்கிறது. இப்படித்தான் ஓசோன் காற்றுமண்டலத்தில் உருவாகிறது. இப்படி ஓசோன் உருவாகிற அதே நேரத்தில், காற்று மண்டலத்தில் உள்ள மற்ற வாயுகள், அதாவது நைட்ரஜன், குளோரின், புரோமின் போன்ற வாயுக்களும் வினை புரியும் நிலையில் இருக்கும் அல்லவா! அவை புதியதாக

உருவான ஓசோனோடு வினைபுரிந்து ஓசோனை அழித்துவிடுகிறது. இப்படி ஓசோன் வாயு உருவாவதும் அதே நேரத்தில் அழிவதுமான இந்நிகழ்வானது தொடர்ந்து நடைபெறுகிறது. அதேநேரத்தில் ஓசோன் வாயு அழிவது குறைவாக இருப்பதால் ஒரு சமநிலையை நோக்கி நகர்ந்து, மீதமுள்ள ஓசோன் வாயுகள் ஒரு படலமாக அந்த மட்டத்திலேயே உருவாக ஆரம்பித்து விடுகிறது.

இப்படி இந்த ஓசோன் அடுக்கு உருவாகி இருப்பதால்தான் சூரியனிடமிருந்து வரும் புறஊதாக்கதிர்கள் தாக்கம் குறைவாக இருக்கிறது. இதனால்தான் பூமியில் வாழ்கின்ற மனிதன் உள்பட அனைத்து உயிரினங்களும் பாதுகாப்பாக இருக்கின்றன. எனவேதான் இந்த ஓசோனை நல்ல ஓசோன் என்று விஞ்ஞானிகள் கூறுகிறார்கள் என்று ஒரு நீண்ட விளக்கத்தை பாலா சொல்லி முடித்தான். ஆசிரியருக்கு

ஒரே ஆச்சரியம். எட்டாவது படிக்கிற இந்த பையன் எவ்வாறு விபரமாக எளிமையாக எடுத்துச் சொல்கிறான். அவனைக் கட்டிப்பிடித்து முதுகில் தட்டிக்கொடுத்தார். பாலா மெல்ல மகிழ்ந்து போனான். அது சரி அப்ப கெட்ட ஓசோன் எது? என ஆசிரியர் விடாமல் கேட்டார். ஓ! அதுவா என மீண்டும் பேச ஆரம்பித்தான் பாலா. காற்று மண்டலத்தில் மேலே எவ்வாறு ஓசோன் உருவானதோ அதேபோல எளிதாக நமது சுவாசத்தில் கலந்துவிடுகிற தரைப்பகுதியில் ஓசோன் உருவாகிறது. இது எப்படி சாத்தியமானது என்றால், இதற்கு மனிதர்களாகிய நாம்தான் காரணம். நாம் போக்குவரத்திற்கு பயன்படுத்தும் கார், பேருந்து, லாரி, இருசக்கர வாகனம் போன்றவற்றிலிருந்து வெளியாகும் நச்சுப்புகையே காரணம். மேலும் மிக முக்கியமாக பல்வேறு தொழிற்சாலைகளில் இருந்து வரும்

நச்சுப்புகை காரணமாகவும் நமது காற்றுமண்டலம் சூடாகிறது. இப்படி சூடாவதால் காற்றில் உள்ள ஆக்சிசன் அணுக்கள் அதிர்வுக்கு உள்ளாகி உடையத்தொடங்குகிறது. அதேநேரத்தில் உடையாத ஆக்சிசன் அணுக்களோடு சேர்ந்து ஓசோனாக மாறுகிறது.

இப்படி உருவான ஓசோன் நேரடியாக நமது சுவாசத்தில் புகுந்து பாதிப்பை ஏற்படுத்துகிறது. இதனால் மூச்சுத்திணறல், ஆஸ்துமா போன்ற நோய்கள் உருவாகிறது. நமது நாட்டில் உள்ள பெரு நகரங்களில் தனியார் மற்றும் பொது போக்குவரத்தினால் வாகன நெரிசல் பெரும் பிரச்சனையாக மாறியுள்ளதை நாம் அறிவோம். எனவேதான் இந்த ஓசோனை கெட்ட ஓசோன் என நாம் அழைக்கிறோம் என்றான் பாலா. ஓசோன் பற்றி இவ்வளவு விசயமா! ஆச்சரியகாக இருக்கிறது. அதேநேரத்தில்

சுற்றுச்சூழலை மாசுபடுத்தி நமக்கு நாமே தீங்கு விளைவித்துக் கொள்வதே தெரியாமல் வாழ்ந்து கொண்டிருக்கிறோம் என்ற நினைப்பு வந்தது. உங்களைப்போன்ற மாணவர்கள் நிச்சயம் இந்த நிலைமையை உணர்ந்து புரிய வைப்பீர்கள் என்று நான் நம்புகிறேன். அதோடு மட்டுமல்ல இதற்கு மாற்று வழிகள் கண்டு நாமும் மாறிக்கொள்ள வேண்டும் என்ற உத்வேகத்தை நான் பெற்று விட்டேன். நாம் சேர்ந்து இந்த சூழ்நிலையை சரி செய்ய முயற்சி செய்வோம் என்று ஆசிரியர் பாலாவை வெகுவாக பாராட்டினார். அது சரி பாலா எனக்கு மேலும் ஒரு கேள்வி இருக்கிறது. அதாவது ஓசோன் அடுக்கை நாம் எவ்வாறு சரி செய்வது? என்றார் ஆசிரியர். பாலா சற்றே யோசித்து பேசலானான். ஓசோன் அடுக்கை நாம் ஒன்றும் சரி செய்ய தேவையில்லை.

காலப்போக்கில் அது தானாகவே

சரியாகிவிடும். ஆனால் அது நீண்ட காலம் தேவைப்படும். அதுவரை நாம் என்ன செய்ய வேண்டும் என்பதுதான் முக்கியம். குளோரா புளோரா கார்பன் கூட்டமைவு வாயுக்கள்தான் ஓசோன் அடுக்கை பலமாக தாக்கி அழிக்க வல்லது. இத்தகைய வாயுக்கள் தொழிற்சாலைகள் மற்றும் வீட்டு உபயோக மின்சாதனங்கள் வழியாக வெளியாகின்றன. இத்தகைய வாயுக்கள் காற்றைவிட எடைகுறைவாக உள்ளதால் அவை மேலே செல்கின்றன. எனவே அவை ஓசோன் அடுக்கோடு வினைபுரிந்து பாதிப்பை ஏற்படுத்துகின்றன. நாம் இத்தகைய வாயுகள் அதிகம் வெளியாகதபடி தொடர்ந்து கண்காணிக்க வேண்டும். அதோடு நமது சுற்றுச்சூழலை தொடர்ந்து மேம்படுத்த வேண்டும். அதாவது மரங்கள் நடுவது, சின்ன சின்ன காடுகளை நமது சுற்றுப்புறத்தில் ஏற்படுத்துவது போன்ற

செயல்களை உறுதியாக வழக்கப்படுத்திக் கொள்ளவேண்டும். முடிந்தால் அதை ஒரு இயக்கமாகக் கூட தொடர்ந்து நடத்த நாம் முன்வரவேண்டும் என்றான் பாலா. பாலாவின் பதிலைக் கேட்டு ஆசிரியர் உள்ளுக்குள் மகிழ்ந்து போனார். மெல்ல பாலாவைத் தட்டிக்கொடுத்தார். அவனும் மெய்மறந்து நின்றான்.. சாய்வு நாற்களியிலிருந்து எழுந்து முகம் கழுவ சென்றார் ஆசிரியர். முகம் துடைத்து நாற்காலியில் அமர்ந்தார். பாலாவிற்கும் சேர்த்து தேனீர் வரவழைத்தார். இருவரும் சேர்ந்து தேனீர் அருந்தினார்கள்.. தெம்பாக இருந்தது ஆசிரியருக்கு. மாணவர்கள் எழுப்பிய எல்லா கேள்விகளுக்கும் விடை கிடைத்ததை ஆசிரியரால் உணர முடிந்தது. இத்தகைய அறிவியல் பார்வை இருந்துவிட்டால், நல்ல மருத்துவ குணமுள்ள துளசி போன்ற தாவரங்களைச் சுற்றித் தவறான

நம்பிக்கைகளைப் பரப்புவதை நாம் எளிதாக புரிந்துகொண்டு செயல்படமுடியும் என்ற எண்ணம் ஆசிரியர் மனதில் தோன்றியது. மாணவர்கள் எழுப்பிய எல்லா கேள்விகளுக்கு நாளை இதே உணர்வோடு பாடம் நடத்த முடியும் என்ற நினைப்பே அவரை மகிச்சியில் ஆழ்த்தியது. பாலாவிற்கு நன்றி சொல்லி வாழ்த்தி அனுப்பிவைத்தார்.

# 16. வெளிர் மஞ்சள்

-நவம்பர் 24, 2019

தமிழாசிரியர் சொன்னது மாதிரி ஆளுக்கொரு பூச்செடியை வளர்க்க முடிவு செய்து விட்டார்கள் மாணவ மாணவியர்கள். இதற்காக ஆளுக்கொரு மண் பூந்தொட்டியை வாங்கி விட்டார்கள். அதிகப்படியான நீர் கசிந்து ஒடுவதற்கு பூந்தொட்டியின் அடியில் சிறு துவாரம் இருக்கிறதா என்று பார்த்து வாங்கினார்கள். கொஞ்சம் மண்புழு உரமும் மக்கிய தேங்காய்நாரும் சேர்த்து ஒன்றன் மேல் ஒன்றாக பூந்தொட்டியில் வைத்து அடைத்தார்கள். அவர்கள் அப்பகுதியில் கிடைத்த மண்ணையும் தொட்டியில் கலந்து வைத்தார்கள். தேவையான அளவிற்கு நீர்

ஊற்றி பதப்படுதினார்கள். வகுப்பிற்கு வெளியே மைதானத்தைச் சுற்றிலும் தொட்டிச் செடிகளை தகுந்த இடைவெளி விட்டு வைத்தார்கள். மாணவ மாணவியர்கள் சூரிய ஒளி நன்றாக படும்படி தங்கள் தொட்டியைச் சற்றே இடம் மாற்றி வைத்தார்கள். மாணவ மாணவியர்கள் தாங்கள் விரும்பிய செடிகளில் நாற்றை நட்டு வைத்தார்கள். காலையும் மாலையும் தவறாது செடிகளுக்கு தேவையான அளவு தண்ணீர் ஊற்றி கவனமாக பார்த்துக் கொண்டார்கள். ஒவ்வொரு நாளும் மாணவ மாணவியர்கள் ஓய்வு கிடைக்கும் போதெல்லாம் வந்து பார்த்துக்கொண்டே இருந்தார்கள். எப்போது அவரவர் செடிகள் துளிர் விட்டு வளர்ந்து பூ கொடுக்கும் என்று ஆவலோடு இருந்தார்கள். தமிழாசிரியரும் அவ்வப்போது வந்து பார்த்து மாணவ மாணவியர்களை ஊக்கப்படுத்தினார்.

என் செடிதான் முதல்ல வளர்ந்து பூ பூக்கும் என மாணவ மாணவியர்களுக்குள் போட்டி இப்பொழுதே ஆரம்பித்து விட்டது. கொஞ்ச நாட்களில் செடிகள் துளிர் விட்டு வளர ஆரம்பித்து விட்டது. மாணவ மாணவியர்க ளுக்கு ஒரே சந்தோஷம். சின்னத் துளிர்கள் எவ்வாறு பெரிய இலையாக விரிகிறது என கவனமாக பார்த்து பார்த்து மகிழ்ந்தார்கள். மென்மையான துளிர்கள் மெல்ல வளர்ந்து விரிந்து தடித்த இலைகளாக மாறுவதைக் கண்டு வியந்தார்கள். அடுத்தது எப்போது பூ விடும் என ஆவலோடு தினம் தினம் பார்த்து ஏங்கினார்கள். ஆனால், இந்த மகிழ்ச்சி ஒரு சில மாணவ மாணவியர்களுக்கு கிடைக்கவில்லை. ஏனெனில் அவர்கள் தொட்டியில் வளர்ந்த செடிகளின் இலைகளில் நடுவில் சற்றே வெளிர் மஞ்சள் நிறம் தோன்ற ஆரம்பித்து விட்டது. என்ன செய்வது என்று

புரிய வில்லை. நமது செடிகளில் பூ வருமா? வராதா? என கேள்விகளை அவர்களுக்குள் கேட்க ஆரம்பித்து விட்டனர். இச்செய்தி தமிழாசிரியர் காதுகளுக்கு மெல்ல எட்டியது. விளையாட்டு மணி அடித்த வுடன் வகுப்பறையை விட்டு வெளியே வந்து ஒவ்வொரு செடியாக பார்வை யிட்டார். மாணவ மாணவியர்கள் அவர்களின் தொட்டிச் செடிகளுக்கு அருகில் வந்து நின்று கொண்டார்கள். சில தொட்டிச் செடிகளுக்குக் கீழே அவரை, மொச்சை விதைகள் முளைத்து வருவதைப் பார்தார். ஒரு தொட்டியில் மாஞ்செடி வளர்ந்திருந்தது. சில தொட்டிகளில் நெல்லும் கேழ்வரகும் முளைவிட்டிருந்தன. தமிழாசிரியருக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. மாணவர்களது இயல்பான படைப்பாற்றலைக் கண்டு வியந்து போனார். அப்பொழுதுதான் கவனித்தார், சில தொட்டிச் செடிகளின் இலையில்

வெளிர் மஞ்சள் நிறம் பரவி இருந்தது. ஆசிரியரை மாணவ மாணவியர் சூழ்ந்து கொண்டனர். ஏன் சார் எங்க செடியில மட்டும் மஞ்சள் நிறத்துல இலை வந்தது? என கேட்க ஆரம்பித்துவிட்டனர். இது சத்து குறைவால் வருகிறது. மாட்டுச்சாணம் கலந்த நல்ல எருவாக போட்டா எல்லாம் சரியாகி விடும் அல்லது வீடுகளில் உண்டாகும் காய்கறி உள்ளிட்ட கழிவுகளை மக்க வைத்து கம்போஸ்ட் உரம் தயாரித்து போட்டாலும்கூட இது சரியாகிவிடும். கவலைப்படாதீங்க என்று மாணவ மாணவியர்களுக்கு ஆலோசனை வழங்கிவிட்டு வந்துவிட்டார். “இது சரியான பதிலாக இருந்தாலும், அறிவியல் பூர்வமாக அல்லவா இதை விளக்க வேண்டும்”, என தமிழாசிரியர் தனக்குள் கேட்டுக் கொண்டார். அந்த சிந்தனையே மனதில் ஓடிக்கொண்டிருந்தது. தாவரங்கள் பற்றித் தேடித் தேடி படிக்க ஆரம்பித்து

விட்டார். குறிப்பாக இந்த வெளிர் மஞ்சள் ஏன் என தேடிக்கொண்டே இருந்தார். அதற்குச் சரியான பதிலையும் கண்டு பிடித்துவிட்டார். ஆனால் அவர் மனது நிலை கொள்ளவில்லை. இந்த தாவரங்கள் எவ்வளவு முக்கியம்! அடடா இவ்வளவு நாள் வெறுமனே பார்த்துவிட்டோமே! இப்படி உணர்ந்து பார்க்கவில்லை என மனம் அடித்துக் கொண்டது. என்றாலும், மாணவர்கள் தனக்கு இப்படி ஒரு வாய்ப்பை ஏற்படுத்தி கொடுத்ததற்காக மிகவும் மகிழ்ந்து போனார். மாணவர்களை நினைக்க நினைக்க பெறுமையாக இருந்தது. இந்த மனநிலையோடு மாணவர்களுடன் கலந்துரையாடினால் எப்படி இருக்கும்! என்று கற்பனைச் செய்யத் தொடங்கி விட்டார். மறுநாள் வகுப்பறைக்கு ஆவலோடு சென்றார். மாணவ மாணவியரிடம் இலைகளில் ஏன் வெளிர் மஞ்சள் நிறமென கண்டுபிடித்து விட்டீர்களா?

என கேட்டார். யாரிடமும் பதில் இல்லை. ஒரு மாணவி மட்டும் ஒரு வரைபடத்தை எடுத்து வந்து என்னிடத்தில் கொடுத்தாள். அதில் அதற்கான பதில் இருந்தது. ஆனால் அந்த மாணவியால் அதை விளக்க முடியவில்லை. அந்த வரைபடத்தை வகுப்பு முழுவதும் காட்டச் சொன்னேன். எல்லா மாணவ மாணவியர்களும் பார்த்தனர். அந்த வரைபடத்தைப் பார்த்த ஒரு மாணவனுக்கு வியப்பு தாங்கவில்லை. சார்! என சொல்லியபடியே எழுந்து தன் சந்தேகத்தைக் கேட்டான். “பொதுவாக செல்களில் கார்பன், ஹைட்ரஜன், ஆக்சிஜன், நைட்ரஜன் காணப்படும், இது என்ன சார் புதுசா மெக்னீசியம் என்ற உலோகம் இருக்கிறது?” “உனக்கு மட்டுமல்ல அன்றைக்கு இதனைக் கண்டுபிடித்த விஞ்ஞானி களுக்கும் இது ஆச்சரியமாகதான் இருந்தது” என்று சொன்னபடியே மெக்னீசி யத்தின்

கதையைச் சொல்ல ஆரம்பித்துவிட்டார். முதலில் தாவரங்களில் பச்சையாக உள்ள இடங்களில் மட்டுமே ஒளிச்சேர்க்கை நடைபெறும் என்று விஞ்ஞானிகள் கண்டுபிடித்தனர். அதாவது வேர்களோ, பட்டைகளோ, கிளைகளோ, மற்றும் குச்சிகளோ ஒளிச்சேர்க்கை செய்ய முடியாது. இந்த முடிவிற்கு விஞ்ஞானிகள் வந்த பிறகுதான் தாவரங்கள் பச்சையாக இருப்பதற்கு என்ன காரணமென ஆய்வை மேற்கொண்டார்கள். இறுதியில், அதாவது 1817-ல் இரு பிரெஞ்சு விஞ்ஞானிகள் பெல்ட்யாய் மற்றும் கவான்டு இந்த பச்சைப் பொருளை தாவரத்திடமிருந்து பிரித்தெடுத்தனர். இதற்கு பச்சையம் எனப் பெயரிட்டனர். இந்த பச்சையம் ஒரு சிக்கலான மூலக்கூறுகளாக இருந்ததால் இதைப் பற்றி முழுமையாக அறிந்துகொள்ள ஒரு நூற்றாண்டு காலம் காத்திருக்க வேண்டியதாயிற்று. இறுதியாக

1906-ல் ஜெர்மன் விஞ்ஞானி வில்ஸ்டேட்டர் பச்சையத்தைப் பிரித்து விரிவாக ஆராய்ந்தார். அதில் ஒரு ஆச்சரியம் காத்திருந்தது. அதாவது எந்த ஒரு உயிரினத்தின் மூலக்கூறுகளிலும் கார்பன், ஹைட்ரஜன், ஆக்சிஜன், நைட்ரஜன் ஆகிய அணுக்களே இருக்கும். இந்த பச்சையத்திலும் இதுவே காணப்பட்டாலும் கூடுதலாக மக்னீசியம் இருப்பது தெரியவந்தது. இந்த மெக்னீசியமே ஒளிச்சேர்க்கை முழுமை அடைய உதவுகிறது. இந்த மெக்னீசியப் பற்றாக்குறை ஏற்பட்டால் தாவரங்களின் இலைகளில் வெளிர் மஞ்சள் தோன்ற ஆரம்பித்து விடுகிறது. இதனால் ஒளிச்சேர்க்கை பாதிக்கப்பட்டு தாவரங்கள் நன்றாக வளர்ந்து தேவையான மகசூலை வாரி வழங்க முடியாமல் போகும். என்ன மாணவர்களே! வெளிர் மஞ்சளுக்கு காரணமான இந்த மெக்னீசியத்தின்

நீண்ட கதையைப் புரிந்துகொண்டீர்களா? என ஆசிரியர் கேட்டார். மிக விரிவாக எடுத்துக் கூறி தெளிவு படுத்தியற்கு நன்றி ஐயா! என ஒரு சேர மாணவ மாணவியர்கள் ஏழுந்து நின்று பாராட்டினார்கள். மாணவ மாணவியர்களின் பாராட்டுக்கு பதிலாக ஒரு புன்னகையை மட்டும் வழங்கி விட்டு அடுத்த வகுப்பிற்கு சென்று விட்டார். ஆனால் இப்பொழுது மாணவர்களுக்கு குழப்பம் வந்து விட்டது. இவர் தமிழாசிரியரா? அல்லது அறிவியல் ஆசிரியரா என்று.! அடுத்த நாள் தமிழாசிரியர் பள்ளிக்குச் சென்றபோது, தமிழாசிரியர் அறிவியல் ஆசிரியராக மாறிய கதை பள்ளி முழுவதும் வைரலானது தெரிந்து சற்றே வெட்கப்பட்டார்.

# 17. அந்த மாமாதான் அப்பாவா?

## - பழனி.சோ.முத்துமாணிக்கம்

-ஜனவரி 19, 2020

அந்தப் பள்ளியின் ஆண்டுவிழா கலகலப்பாக நடந்து கொண்டிருந்தது.மாணவர்களின் கலைநிகழ்ச்சிகள் கண்டு மகிழ்ச்சிக் கடலில் மூழ்கிக் கொண்டிருந்தனர் அனைவரும்.சிறப்பு விருந்தினர் கல்வி அமைச்சர். கல்வி, விளையாட்டு, பேச்சுப் போட்டி, பாட்டுப் போட்டிகளில் வெற்றி பெற்ற மாணவர்களுக்குப் பரிசுகளை வழங்கிக் கொண்டிருந்தார் அமைச்சர். மேடையேறிப் பரிசுகளை வாங்கிய மாணவர்கள் பெருமிதத்தோடு கீழிறங்கி வந்து, தாம் பெற்ற பரிசுகளை அவரவர் பெற்றோரிடம் காட்டிப்

பூரிப்படைந்து பேசிச் சிரித்துக் கொண்டிருந்தனர். ''அனைத்துப் போட்டிகளிலும் பங்கேற்றுச் சிறப்பிடம் பெற்ற கவின் பெற்றோருடன் மேடைக்கு வரவும்". ஆசிரியர் அறிவித்தவுடன் அம்மா அப்பாவுடன் மேடையேறினான் கவின். வெற்றிக் கோப்பையைப் பரிசாகப் பெற்ற கவினைப் பேசச் சொன்னார் அமைச்சர்.

'நான் எல்லாவகையிலும் சிறந்து விளங்கக் காரணம் என் அம்மாவின் தூண்டுதலும் அப்பாவின் வழிகாட்டுதலும்தான் காரணம்.இந்தப் பரிசை அவர்களுக்குக் காணிக்கை ஆக்குகிறேன்.' கவின் பேசி முடித்தவுடன் மேடையில் இருந்த அனைவரும் கவினுடைய பெற்றோரைப் பாராட்டினார்கள். 'அள்ளிக் குவிச்சுட்டேடா கவின்' என்று கூறியபடி கவினைக் கட்டிக் கொண்டான் ஆதன். நன்றீடா என்று கூறிய கவின், 'டேய்..பூப்பந்து வெளயாட்டுல ஒனக்குத் தாண்டா

பரிசு. கூப்பிடுவாங்க பாரு’ என்ற மகிழ்வான செய்தியையும் சொன்னான். கவின் சொன்னது காதில் விழவே இல்லை ஆதனுக்கு. ஒரே குடியிருப்பில் வசிக்கிறார்கள்.கவின் வீடு முதல் தளத்தில்.ஆதன் வீடு இரண்டாம் தளத்தில்.மாலை வேளையில் அங்குள்ள பூங்காவில் சிறுவர்கள் எல்லோரும் சேர்ந்து விளையாடுவது வழக்கம்.அவர்கள் பாதுகாப்புக்காக வரும் பெற்றோர் கூட்டமும் மிகுதியாக இருக்கும். கவினுடைய அப்பாவும் வருவார். அவனுடன் சேர்ந்து பந்து விளையாடுவார். அவனை ஊஞ்சலில் உட்கார வைத்து ஆட்டி விடுவார். தன்னுடன் விளையாட அப்பா இங்கு இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று ஏங்குவான் ஆதன். அவர்தான் அமெரிக்காவில் இருக்கிறாரே! ஆண்டுக்கு ஒருமுறைதான் வருவார். பத்துநாள் இருந்துவிட்டு, கையை ஆட்டி டாட்டா காட்டிவிட்டுப்

போய்விடுவார். அப்பாவுடன் இருசக்கர வாகனத்தில் உட்கார்ந்து போக வேண்டும்; பெரிய கடைகளுக்குச் சென்று தான் விரும்பிய பொருட்களை வாங்க வேண்டும் என்றெல்லாம் ஆதன் ஏங்குவான்.இங்கேயே இருந்தால் எல்லாம் நடக்கும். அவர்தான் அமெரிக்காவில் வேலைசெய்கிறாரே! பிஞ்சு மனம் நினைவுச் சுமைகளைத் தாங்க முடியாமல் தவிக்கிறது. அம்மாதான் அப்பாவின் வேலைகளையும் இழுத்துப் போட்டுச் செய்கிறார்.இருந்தாலும் எல்லாச் சிறுவர்களும் அப்பாவுடன் போவதும் வருவதுமாகக் கலகலப்பாக இருப்பதுபோல் தன்னால் இருக்க வாய்ப்பில்லையே.' அப்பா இந்தியாவுக்கே வந்திருங்கப்பா..' என்று கெஞ்சியபோது, 'உங்க படிப்புச் செலவுக்கு லட்ச லட்சமாச் செலவளிக்கணுமே கண்ணா..இங்கிருந்தா அவ்வளவு பணம்

கிடைக்காதே’ என்று அப்பா கூறியது நினைவைத் தட்டுகிறது.

‘டேய் ஆதன் மேடைக்கு வரச் சொல்லிக் கூப்பிடறாங்கடா. எந்த நெனப்புல இருக்கற.. என்று கவின் தோளைத் தட்டியவுடன் ஆதன் நனவுலகுக்கு வந்தான். அம்மாவையும் அழைத்துக் கொண்டு மேடையேறி, விளையாட்டு வீரனுக்கான பரிசை வாங்கிக் கொண்டு வந்தான்.வாழ்த்துகள் ஆதன் என்று கவினும் அவனுடைய பெற்றோரும் வாழ்த்தினார்கள். ’என்னடா.. பரிசு வாங்கியும் மொகத்துல கெழுத்தி இல்லையேடா.’ என்றான் கவின். ‘இந்த நேரத்துல அப்பாவும் ஏங்கூட இருந்திருந்தா எவ்வளவு நல்லா இருக்கும்’ என்ற ஆதனைத் தோளோடு அணைத்துக் கொண்டார் கவினுடைய அப்பா. ஆதனுடைய ஏக்கத்தைக் கவினும் புரிந்து கொண்டான். ‘டேய் ஒங்க அப்பாவைப் பார்த்ததாவே ஞாபகம் இல்லை.

ஆனால், போன பொங்கலுக்கு உங்க வீட்டுக்குப் பெரிய்ய்ய்ய பெட்டியோடு ஒரு மாமா வந்து, இருந்து கொஞ்சநாள் இருந்துட்டுப் போனாரே, அவருதான் ஓம் அப்பாவா?' ஆதன் ஆம் என்று சொல்லும் வகையில் தலையை ஆட்டிக் கொண்டு சொன்னான், ஆமடா அந்த மாமாதான் ஏம் அப்பா.

# 18. வேறுபாடுகள் தந்த வெளிச்சம் ! - அன்பழகன்

-ஜனவரி 19, 2020

அறிவியல் கதை

ஆசிரியர் மெல்ல இருமிக்கொண்டே வகுப்பறைக்குள் வந்தார். நாற்காலியை சற்றே இழுத்து வசதியாக அமர்ந்துகொண்டார். மெல்ல மூச்சை நிதானமாக இழுத்து விட்டுக்கொண்டார். மூச்சு நிதானத்திற்கு வந்ததில் ஒரு புதுத் தெம்பு உண்டானது. சரி பாடம் நடத்தலாமென நாற்காலியில் இருந்து எழுந்த போது அவரையும் மீறி தும்பல் வந்துவிட்டது. சற்றே சுதாகரித்துக்கொண்டு கர்சீப்பால்

மூக்கை மூடிக்கொண்டார். மாணவர்களும் கர்சீப்பை எடுத்து மூக்கை மூடிக்கொண்டனர். இது அனிச்சை செயல்போல் உடனடியாக நடந்தேறியது. “கிருமி தொற்று” பரவாமல் இருக்க ஆசிரியர் சொன்ன வழிமுறையில் இதுவும் ஒன்று. சரி! சரி! இந்த இருமலுக்கு என்ன காரணம்? “கிருமிகள்தான் சார்”! என்றான் ஒரு மாணவன். கிருமிகள் என்றால் என்ன? என்றார் ஆசிரியர். அதான் சார்! பாக்டீரியாக்கள், வைரஸ்கள் போன்ற கிருமிகள்தான் மனிதன், விலங்குகள் மற்றும் தாவரங்களுக்கு நோய்களை உண்டாக்குகின்றன என்றான் இன்னொரு மாணவன். சரியாகத்தான் சொல்றீங்க, இன்றைக்கு இந்த கிருமிகளைப் பற்றித்தான் படிக்கப் போகிறோம். அதற்கு முன்னாடி இந்த வைரஸ்களுக்கும் பாக்டீரியாக்களுக்கும் என்ன வேறுபாடு என்பதை தெரிந்து கொண்டால்

இன்னும் பாடம் எளிதாக புரியும் என்றார் ஆசிரியர். மாணவர்களும் உடனே ஆர்வமானார்கள். அதுமட்டுமல்ல் தங்களுக்குள் பேசி பாக்டீரியா குழு வைரஸ் குழு என்று இரண்டு குழுக்களாக பிரிந்து விட்டார்கள். “இந்த உலகம் காற்றால் நிரம்பி இருப்பதைப் போல கிருமிகளாலும் நிரம்பி இருக்கின்றன. இவற்றால் நன்மைகளும் உண்டு தீமைகளும் உண்டு. இந்த கிருமிகளை எதிர்கொள்வதாலேயே மனிதர்கள், விலங்குகள், தாவரங்கள் மற்றும் இதர நுண்ணுயிர்களால் வாழமுடிகிறது. நமது இரத்தத்தில் உள்ள வெள்ளையணுக்கள் இந்த கிருமிகளை எதிர்த்து போராடி நம்மைக் காத்து வருகின்றன. அதோடு நாம் குழந்தையாக இருந்தபோது பல்வேறு நோய்எதிர்ப்பு மருந்துகளை தடுப்பு ஊசிகளாக நாம் எடுத்துக் கொண்டுள்ளோம். இதனால் போலியோ, தட்டம்மை போன்ற

நோய்கள் நம்மை தாக்கா வண்ணம் வாழ்ந்து வருகிறோம" என்று கிருமிகள் குறித்த ஒரு சிறிய அறிமுகத்தோடு ஆசிரியர் விவாதத்தைத் தொடங்கிவைத்தார். மாணவர்கள் தங்கள் குழுக்களோடு பேசிக்கொண்டார்கள்.

சரி! சரி! பாக்டீரியாக்குழுவே தங்களது விவாதத்தைத் தொடங்கி வைக்கட்டும்" என்றார் ஆசிரியர். "பாக்டீரியா ஒரு செல் உயிரி; அதனால் தனித்து வாழமுடியும்" என்றது பாக்டீரியாக்குழு. "வைரஸ் ஒரு தீயசக்தி! அதாவது அது ஒரு நியூக்கிளிக் அமில துண்டு! தம்மளவில் உயிருடையவை அல்ல! அவை தனித்திருக்கையில் செயலற்றவையும் தீங்கற்றவையும் ஆகும். ஆனால் அது மற்ற உயிரினகளில் உள்நுழைந்து செல்களைத் தாக்கி அழித்து அங்கேயே பல்கி பெருகி வாழத்தொடங்குகிறது. எனவே அதற்கு

இன்னொரு உயிரி தேவை” என்றது வைரஸ் குழு. “பாக்டீரியாக்கள் நோய்களை உண்டாக்கும் போது ஆண்டிபயாடிக் மருத்துகளைக் கொண்டு மேலும் பல்கிப்பெருகுவதை கட்டுப்படுத்த முடியும்” என்றது பாக்டீரியாக்குழு. ”ஆனால் வைரஸ்கள் நோய்களை உண்டாக்கும்போது ஆண்டிபயாடிக் மருத்துகளைக் கொண்டு மேலும் பல்கிப்பெருகுவதை முற்றிலுமாக கட்டுப்படுத்த முடியாது: ஓரளவிற்கு மட்டுமே கட்டுப்படுத்தலாம் என்றது வைரஸ் குழு.

மாணவர்கள் இப்படி வேறுபாடுகளை சொல்ல சொல்ல ஆசிரியர் கேட்டுக்கொண்டிருந்தார். சரி! உங்கள் விவாதம் நன்றாக தொடங்கி இருக்கிறது. வாழ்த்துகள்! இன்னும் இதில் நாம் தெளிவுபெற வேண்டுமென்றால் இரண்டு குழுக்களும் பயனுள்ள வேறுபாடுகளை பகிர்ந்து கொள்ளலாமே! என்றார் ஆசிரியர்.

“காற்றிலிருந்து நைட்ரஜனை எடுத்து நமக்காக பயனுள்ள அமினோ அமிலங்களாக மாற்றுகின்றன. ஆனால் வைரஸ்கள் மனிதர்களுக்கு தீங்கையே விளைவிக்கின்றன” என்றது பாக்டீரியாக் குழு. “பாக்டீரியாக்கள் காற்றில் உள்ள சத்தை உறிஞ்சிக்கொண்டு பல்கி பெருகுகின்றன. இந்த பாக்டீரியாக்கள் மேலும் பல்கி பெருகாவண்ணம் வைரஸ்கள் அவற்றை தாக்கி அழிக்கின்றன. இதனால்தான் கிருமிகள் ஒரு குறிப்பிட்ட அளவுக்குமேல் வளரா வண்ணம் ஒரு சமநிலையை அடைகிறது. இதற்கு வைரஸ்தான் காரணம்” என வைரஸ் குழு சொல்லி முடித்தபடியே துள்ளிக்குதித்தனர். “பால் தயிராவதற்கும், நாம் உண்ட உணவு செரிப்பதற்கும், ஆண்டிபயாடிக் போன்ற நோய்எதிர்ப்பு மருந்துகள் தயாரிப்பதற்கும் பாக்டீரியாக்கள் பயன்படுகின்றன. அதுமட்டுமா

இந்த பூமியில் தாவரங்கள் உருவாவதற்கு முன்பே சூரிய ஒளியை எடுத்துக்கொண்டு ஆக்ஸிஜனை வெளியிட்டு நமது காற்று மண்டலத்திற்கு தேவையான அளவு ஆக்ஸிஜனை இட்டு நிரப்பியது இந்த பாக்டீரியாக்கள்தான்" என்று பாக்டீரியாக் குழுவினரும் துள்ளிக்குதித்தனர். சபாஷ் சரியான போட்டி என ஆசிரியர் பாராட்டினார். சில மாணவர்கள் இரண்டு குழுவில் இருந்தாலும் தங்களுக்கு தோன்றுவதை எடுத்துச் சொல்ல தயக்கத்தோடு அமர்ந்திருந்ததை ஆசிரியர் அப்பொழுதுதான் கவனித்தார். இந்த சப்தத்தில் உங்களால் பேச முடியவில்லையா? ஏன் தயங்குகிறீர்கள்; உங்கள் மனதில் உள்ளதை தைரியமாக சொல்லலாம் என்றார் ஆசிரியர். மாணவர்கள் மத்தியில் சற்று நேரம் அமைதி நீடித்தது.

சரி! சரி! நீங்கள் படித்தவற்றை மற்றவர்கள்

சொல்லிவிட்டார்கள் என்பதற்காக ஒருவேளை நீங்கள் சொல்லாமல் இருக்கலாம்! சரி இப்பொழுது உங்களுக்கு ஒரு வாய்ப்பு தருகிறேன்! நீங்கள் என்ன நினைக்கிறீர்களோ அதை தயங்காமல் என்னிடம் சொல்லலாம்! என்று ஆசிரியர் அவர்களையும் பங்கேற்க வைப்பதற்காக முயன்று கொண்டிருந்தார். மெல்ல தயக்கத்தோடு ஒரு மாணவன் எழுந்தான். வெரிகுட்! சொல்லுங்க என்றார் ஆசிரியர்! சார்! பாக்டீரியாகளுக்கும் வைரஸ்களுக்கும் ஒரு முக்கியமான வித்தியாசம் இருக்கு சார்! நான் நினைப்பது தவறாகக்கூட இருக்கலாம், நான் சொல்லலாமா சார் என்றான்!. எதுவானாலும் சொல்லு! நான் பார்த்துக்கொள்கிறேன் என்றார் ஆசிரியர். சார்! பாக்டீரியாக்களின் பயன்களைப் பார்க்கும்போது அது ஏதோ மாற்றத்திற்கு உள்ளாவது போல் தெரிகிறது சார்! ஆனால்

வைரஸ்கள் எந்த மாற்றத்திற்கும் உள்ளாகாமல் பிற உயிரினங்களின் செல்களை அழிப்பதிலேயே குறியாக இருப்பதாக தெரிகிறது சார்! என்றான். உடனே ஆசிரியர் சபாஷ்! சரியான சிந்தனை! பாடபுத்தகத்தில் இருப்பதை மட்டும் சொல்லாமல் புதியதாக ஒன்றை சிந்தித்து சொன்னாய் அல்லவா! உனக்கு ஆயிரம் பாராட்டுகள் என்றார். அதுசரி! அது என்ன மாற்றமாக இருக்கமுடியும் என யாராவது சொல்லமுடியுமா? என்றார் ஆசிரியர்! ஒரு நிலையிலிருந்து இன்னொரு புதிய நிலைக்கு மாறுவதால் அதை வேதியியல் மாற்றமென சொல்லலாமா சார் என்றான்! அதே மாணவன்.

மாணவர்கள் அனைவரும் அந்த மாணவனையே அதிசயமாகப் பார்த்தனர். இவனா இப்படி புதியதாக சிந்தித்தான் என மாணவர்கள் தங்களுக்குள் பேசிக்கொண்டனர். “உனது சிந்தனை சரியா! தவறா! என்பது முக்கியமில்லை!

அதை ஆய்வாளர்கள் பார்த்துக்கொள்வார்கள். ஆனால் இப்படி வித்தியாசமாக சிந்தித்தாய் அல்லவா! அதுதான் முக்கியம்" என்றார் ஆசிரியர். அன்றைய வகுப்பை முடித்து விட்டு ஆசிரியர் வீட்டிற்கு வந்து விட்டாலும் வகுப்பறையில் அந்த மாணவன் சொன்ன பதிலே மீண்டும் மீண்டும் சிந்தனையில் வந்து போனது. வேறுபாடுகளை எடுத்து எழுதுக, பொருத்துக போன்றவை எளிமையாக பாடம் நடத்துவதற்கும் எளிதாக புரிந்து கொள்வதற்கும் என்று மட்டுமே ஆசிரியர் நினைத்திருந்தார். உண்மையில் மாணவர்கள் புரிந்து கொள்வதைத் தாண்டி புதிய சிந்தனைகளை உருவாக்கும் மாயத்தை நிகழ்த்துவதை நினைத்துப் பார்த்தார். தனிமங்களின் பட்டியலை முதன்முதலில் வரிசைப்படுத்தி பார்த்த விஞ்ஞானி மெண்டலெவ் நினைத்திருப்பாரா?

நாளை இந்த பட்டியல் பல விஞ்ஞான கண்டுபிடிப்புகளையும் புதிய தனிமங்களையும் கண்டறிய உதவுமென்று! வெறும் பட்டியல் படுத்துவதால் என்ன இருக்கிறதென்று அவர் அலட்சியமாக இருந்திருந்தால் இத்தகைய மாற்றம் நிகழ்ந்திருக்குமா?

நமது மூக்கானது சுவாசத்திற்கு மட்டும் பயன்படவில்லை அதற்கும் மேலாக வாசனையை அறியும் நுட்பத்தை கொண்டுள்ளதை ஒப்பிட்டுப்பார்த்தார் ஆசிரியர். இப்படித்தான் நாம் ஒவ்வொரு செயலையும் வெறும் செயல்கள் அல்ல! அதைத்தாண்டிய புதிய நுட்பத்தை நாம் உய்த்துணர வேண்டும் என்ற சிந்தனை ஆசிரியர் மனதில் ஓடிக் கொண்டிருந்தது. இனி நல்லா படிக்கிற மாணவர்களுக்கு தருகிற அதே முக்கியத்துவத்தை தயங்குகிற பின்தங்குகிற ஏன் ஒவ்வொரு மாணவரையும் வகுப்பில் பங்கேற்க

வைக்க வேண்டும் என்ற கொள்கை முடிவோடும், அதை ஒவ்வொரு நாளும் செயல்படுத்துவதில் உறுதியாக இருப்பதோடு அதற்காக கடினமாக உழைக்கவும் உறுதி செய்துகொண்டார்.

# 19. துப்பறியும் துர்கா -

## -ſ-உதயசங்கர்

-பிப்ரவரி 9, 2020

துர்கா எப்படி துப்பறியும் துர்கா ஆனாள் தெரியுமா? என்னது நம்ம பக்கத்து வீட்டுக்குட்டிப்பொண்ணு துர்கா துப்பறியும் நிபுணரா என்று ஆச்சரியப்படுகிறீர்கள் இல்லையா! அப்படி அவளுடைய அம்மா மீனாட்சி தான் கூப்பிடுகிறாள். ஆனால் அவளுக்கு இன்னும் அப்படி ஒரு பெயரை அவளுக்கு அம்மா சூட்டியிருப்பது தெரியாது. அவளுடைய அம்மா துப்பறியும் கதைகளை அவளுடைய சின்னவயதிலேயே படிப்பாள். துப்பறியும் சங்கர்லால், துப்பறியும் சாம்பு, இவர்களை

எல்லாம் அவளுக்கு ரொம்பப்பிடிக்கும். ஏன் எல்லாக்கதைகளிலும் ஆம்பிளைப் பசங்களே துப்பறிவாளராக இருக்கிறாங்க என்று கேள்வி அவளுக்கு வரும். அவளும் துப்பறிந்து பார்த்தாள். வகுப்பில் காணாமல் போன கோமதியின் பென்சிலைக் கண்டுபிடித்தாள். அது சிவகாமியின் பைக்குள் போய் ஒளிந்து கொண்டதைக் கண்டு பிடித்தாள். பென்சிலிடம் ”நீ ஏன் ஓடிப்போனாய்?’’ என்று கேட்டதுக்கு பென்சில்

‘‘கோமதி தினம் பென்சிலைச் சீவிச் சீவிக் கரைக்கிறா.. அப்புறம் நான் குட்டியாயிருவேன்ல..” என்றது. கோமதியிடம் பென்சிலின் வருத்தத்தைச் சொல்லி இனிமேல் அவசியமில்லாமல் பென்சிலைச் சீவக்கூடாது என்று அறிவுரை சொன்னாள். மீனாட்சிக்கு ரொம்பப் பெருமையாக இருந்தது. இது தான் அவள் முதலும் கடைசியுமாக கண்டுபிடித்தது. அவள் எப்போதும் கண்களை

உருட்டிக்கொண்டு அங்கேயும் இங்கேயும் பார்த்துக் கொண்டே திரிந்ததைப் பார்த்த அவளுடைய அம்மா, ”என்னாச்சி.. ஏன் கண்ணைத் தரையிலேயே நட்டுக்கிட்டே திரியிறே.. முழி பிதுங்கி வெளியே வந்துரும்” என்று கத்தினாள். மீனாட்சி பயந்து விட்டாள். ஆனால் துப்பறிவதை அவள் விடவில்லை. வீட்டில் எந்தப்பொருள் காணாமல் போனாலும் மீனாட்சி தான் கண்டுபிடித்தாள். அப்புறம் எல்லாம் மறந்து போய் விட்டது. துர்கா தவழ ஆரம்பித்ததுமே துப்பறிகிற வேலையைத் தொடங்கி விட்டாள். தரையில் கண்ணுக்கே தெரியாமல் வரிசையாகப் போய்க் கொண்டிருந்த சித்தெறும்புகளின் பின்னால் தவழ்ந்து போனாள். எறும்பு வரிசையில் கடைசியாகப் போய்க் கொண்டிருந்த எறும்பு திரும்பி துப்பறியும் துர்காவிடம் வந்து தன் முன்கால்களைத் தூக்கி,

“பாப்பா எங்க பின்னாடி வராதே.. பீ கேர்ஃபுல்..” என்று எச்சரித்தது. துப்பறியும் துர்கா உடனே நின்று விட்டாள். அப்படியே வேறு எங்கோ பராக்கு பார்ப்பதைப் போல தலையை அங்கிட்டும் இங்கிட்டும் திருப்பினாள். எறும்பு வேகவேகமாக திரும்பிப் போனபோது துப்பறியும் துர்காவும் பின்னாலேயே போனாள். எறும்புகளின் வரிசை எங்கே போச்சு தெரியுமா? அப்படியே அடுக்களைக்குள் போனது. துப்பறியும் துர்காவும் அடுக்களைக்குள் போனாள். எறும்பு வரிசை அடுக்களையில் இருந்த அலமாரி மீது ஏறியது. துப்பறியும் துர்காவும் அலமாரி வரை போய் முட்டி நின்றாள். அண்ணாந்து பார்த்தாள். மேலே பார்த்தால் துர்காவின் பால் டப்பா இருந்தது. எறும்பு வரிசை அந்த டப்பாவின் மீது ஏறிக் கொண்டிருந்தது. துர்கா அலமாரியின் கதவுகளைப் பிடித்துக் கொண்டு

மெல்ல எழுந்து நின்றாள். எறும்புகளைப் போல அலமாரியில் ஏறமுடியுமா என்று காலைத் தூக்கினாள். அப்படியே சப்பென உட்கார்ந்தாள். லேசாக வலித்தது. சுற்றும் முற்றும் யாராவது பார்க்கிறார்களா என்று பார்த்தாள். பால் டப்பாவைப் பார்த்ததும் வயிறு பசித்தது. அருகில் அம்மாவும் இல்லை. உடனே அழ ஆரம்பித்து விட்டாள். அழுகைச் சத்தம் கேட்டதும் எங்கிருந்தோ அம்மா ஓடி வந்தாள். துப்பறியும் துர்காவைத் தூக்கி, ”என்னடா செல்லம்? இங்கே என்ன பண்றே? என்ன வேணும் செல்லத்துக்கு?’’ என்று கேட்டாள். துப்பறியும் துர்கா அலமாரியில் இருந்த பால்டப்பாவைக் காட்டினாள்.

“செல்லத்துக்குப் பசிக்கிதா?’’ அம்மா பால் டப்பாவை எடுத்தாள். அதில் எறும்புகள் அப்போது தான் உள்ளே நுழைந்து கொண்டிருந்தன. எறும்புகளைப் பார்த்த அம்மா அவற்றைக் கீழே

தட்டி விட்டாள்.”ஆகா! எறும்புக்குப் பின்னாடி துப்பறிய வந்தியா செல்லம்! துப்பறியும் துர்கா! துப்பறியும் துர்கா!’’ என்று துப்பறியும் துர்காவைத் தூக்கிக் கொஞ்சினாள். துர்காவுக்கு கூச்சமாக இருந்தது. “அப்படி என்ன பெரிசா செய்ஞ்சிட்டேன்! இன்னும் இருக்கு..’’ என்கிற மாதிரி சுற்றிலும் பார்த்தாள். கீழே எறும்புகள் துப்பறியும் துர்காவைப் பார்த்து,”இரு உன்னைக் கவனிச்சிக்கிறோம்..” என்று முன்காலைத் தூக்கி சபதம் போட்டுக் கொண்டே ஓடி ஒளிந்தன. எறும்புகள் ஓடுவதைப் பார்த்து துர்கா கெக்கேக்கே என்று சிரித்தாள். அம்மாவும் துப்பறியும் துர்காவைப் பார்த்துச் சிரித்தாள்.

# 20. காடு ஒழுங்கற்றதா? - அன்பழகன்

-பிப்ரவரி 16, 2020

பள்ளிக்கூடத்திற்கு ஒரு மணிநேரம் முன்னதாக வந்துவிடுவான் மணிநாத். உடனே பையை வைத்துவிட்டு விளையாட ஆரம்பித்துவிடுவான். ஆனால் அன்று அப்படி விளையாட முடியவில்லை. பள்ளியின் விளையாட்டு மைதானத்தைச் சுற்றிலும் மரக்கன்றுகள் நடப்பட்டு இருந்தன. பாதுகாப்பிற்காக மரக்கன்றுகளைச் சுற்றி இரும்பு கூண்டு அமைத்திருந்தார்கள். அதன்மீது ”காடழிந்தால் நாடே அழியும், மரம் வளர்ப்போம்” என்று எழுதப்பட்டிருந்தது. அப்பொழுதுதான்

அவனின் தோழி சுவேதா ஓடி வந்தாள். மரம் வளர்த்தால் எப்படி காடாகும்? மாந்தோப்பு தென்னந்தோப்பு மாதிரி தோப்புதானே உருவாகும்? என்றாள். அப்ப தோப்பு காடாவாது என்கிறாயா? என சட்டென கேட்டான் மணிநாத். தோப்பு என்றால் ஒழுங்கமைந்து காணப்படும்! காடு அப்படியா? அது ஒழுங்கற்றதுதானே! என்றாள் சுவேதா.

இப்படி உரையாடல் போய்க்கொண்டிருந்த போதுதான், கணக்கு ஆசிரியர் அறிவழகன் அவர்களை வகுப்பறைக்கு உள்ளே அழைத்தார். அவர்கள் வணக்கம் சொன்னபடியே உள்ளே வந்தனர். “ஏதோ விவாதம் போய்க்கொண்டிருந்ததே, என்ன அது” ஆவலோடு கேட்டார் ஆசிரியர். உடனே சுவேதா ஒரு சாக்பீசை எடுத்து கரும்பலகையில் கீழ்கண்டவாறு எழுதினாள். மரம் = தோப்பு = காடு என்பது சரியா சார்? என்றாள். நான் கணக்கு ஆசிரியர் என்பதால்

எனக்கு சமன்பாடு போட்டு காண்பிக்கிறாயா! என சிரித்துக் கொண்டே வினவினார். மரக்கன்றுகள் நட்டால் எப்படி காடாகும்? என எங்களுக்குள் பேசிக்கொண்டோம் என்றாள் சுவேதா. “நல்லது இன்றைக்கு மிகவும் தேவையான சுற்றுச்சூழலுக்கு உதவும்படியான உங்கள் விவாதம் தொடரட்டும்” என்றார் ஆசிரியர். உடனே வகுப்பில் இருந்து ஒரு மாணவி எழுந்து வந்து கரும்பலகையில் சுவேதா எழுதியதை சற்றே மாற்றி எழுதினாள். அதாவது சமக்குறியை எடுத்துவிட்டு அம்புக்குறியை போட்டு விட்டாள்.

மரம் - தோப்பு - காடு

அனைவருக்கும் ஒரே ஆச்சரியம். அந்த மாணவி சுமாராக படிக்கக்கூடியவள்தான். ”அவள் எப்படி இப்படி சிந்தித்தாள்” என வகுப்பே ஆச்சரியப்பட்டது. உனது சிந்தனை சரிதான்.

மரங்கள் நிறைய வைத்தாள் அது தோப்பாக மாறும், அந்த தோப்பே பின்பு காடாக மாற வாய்ப்பு உண்டு. உனது சிந்தனைக்கு பாராட்டுக்கள் என அந்த மாணவியை ஆசிரியர் பாராட்டினார். மாணவர்கள் சுதந்திரமாக சிந்திக்கும் போது வகுப்பறை சப்தம் மட்டுமல்ல புதிய சிந்தனைகளும் பொங்கி எழும் என்பதற்கு நமது மாணவியே சாட்சியாகி விட்டாள். என்ன மணிநாத் உங்கள் விவாதம் முடிவுக்கு வந்ததா! என ஆசிரியர் ஆவலோடு கேட்டார். ஒரளவிற்கு முடிவுக்கு வந்தாலும் காட்டின் ஒழுங்கற்ற தன்மை எங்களுக்கு விளங்கவில்லை சார்! என்றான். காட்டின் அடிப்படை அலகு மரம்தான். அந்த மரத்தோடு சேர்த்து வளரும் செடி, கொடி, புதர்கள், விலங்குகள், பறவைகள் மற்றும் நுண்ணுயிர்கள் இவற்றின் பிரிக்க முடியாத உறவு நிலைகளை நாம் கற்க முனையும் போது உங்களுக்கான விடை கிடைத்தே தீரும் என

எடுத்துச் சொல்லி அடுத்த வகுப்பிற்குச் சென்றார் ஆசிரியர்.

சென்றார் ஆசிரியர். பள்ளிக்கூடம் விட்டு வீட்டிற்கு வந்தாலும், காட்டின் ஒழுங்கற்றத்தன்மை எங்களுக்கு விளங்கவில்லை சார்! என மாணவர்கள் எழுப்பிய கேள்விக்கு இன்னும் சரியான அறிவியல் விளக்கத்தை தேட வேண்டும் என்ற சிந்தனையே ஆசிரியருக்கு வந்து போனது. அப்பொழுதுதான் காலை நாளிதழில் படிக்காமல் விட்டுப் போன கட்டுரைகளைப் படிக்க புரட்டினார் ஆசிரியர். அதில் மரம் வளர்த்த மாமனிதர் மரம் தங்கசாமியைப் பற்றி கட்டுரை ஒன்று பிரசுரமாகி இருந்தது. அதில் தனி ஒரு மனிதரால் ஒரு குறுங்காட்டை எவ்வாறு உருவாக்கிச் சாதித்தார் என்பது பற்றி எழுதி இருந்தது. முதலில் பல இன மரக்கன்றுகளை அவரின் நிலமெங்கும்நட்டு வளர்த்தார் தண்ணீர்

பற்றாக்குறை இருந்தபோதும் விடாப்பிடியாக பல வழிகளில் முயன்று மரங்களை வளர்த்திருக்கிறார். தோப்பாகி வளர்ந்த பின்னரும், அதை காடாக உயிர்பெற்று எழுவதற்கு தேவையான பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்து ஒரு குறுங்காட்டை மெல்ல மெல்ல உருவாக்கி விட்டிருக்கிறார். வேம்பு, தேக்கு, ஈட்டி, மனோரஞ்சிதம் மற்றும் பலா உள்ளிட்ட பல வகைகளும், அரிய மூலிகை செடிகளும் இணைந்த காடு அனைவரின் கவனத்தையும் ஈர்த்ததில் வியப்பொன்றுமில்லை.

தற்போது இந்த காடே அவரின் வாழ்க்கைக்கு மட்டுமல்ல, தற்போதைய வறண்ட சுற்றுச்சூழலையும் மேம்படுத்துவதாக மாறிவிட்டது. இதுபோன்ற கற்பகச் சோலைகளை நாமும் முயன்றால் உருவாக்கி நமது சுற்றுச்சுழலை மேம்படுத்த முடியும் என்று அந்த கட்டுரை வழிமொழிந்திருந்தது. இந்த கட்டுரையைப்

படித்தவுடன், ஒரு புதிய முயற்சி எவ்வாறு நமக்கும் நமது சமுதாயத்திற்கும் பயனுடையதாக மாறியிருக்கிறது என்பதை புரிந்து கொள்ள முடிகிறது. நமது மாணவர்களும் இதைத்தான் கற்பனை செய்திருக்கிறார்கள் என்று நினைத்தபோது பெருமையாக இருந்தது. வாய்ப்பு கிடைத்தால் நமது மாணவர்களும் இதுபோன்ற குறுங்காடுகளை எதிர்காலத்தில் உருவாக்குவார்கள் என்ற நம்பிக்கை ஆசிரியருக்குள் எழுந்தது. ஆனாலும் தற்போது பாதி கிணறு தாண்டியது போலத்தான் ஆசிரியர் உணர்ந்தார். காடு ஒழுங்கற்றதா என்று மாணவர்கள் எழுப்பிய கேள்விக்கு இன்னும் பதிலைத் தேட வேண்டும் என்ற சிந்தனை அவருக்குள் மீண்டும் வந்து போனது. நாளிதழை மடித்து வைத்து விட்டு அடுத்த வேலையைப் பார்க்கச் சென்றார். சில நாட்கள்

கழித்து ஒரு இலக்கிய விழாவில் சுற்றுச்சூழல் ஆர்வலர் தமிழ்மணியை ஆசிரியர் சந்தித்தார். தமிழ்மணியோ புதுச்சேரியின் சுற்றுச்சூழலை அனைத்து வகையிலும் பாதுகாக்க வேண்டும் என்ற கொள்கை உடையவர். அவரிடம் மாணவர்கள் எழுப்பிய கேள்வியை ஆசிரியர் பகிர்ந்து கொண்டார்.

மாணவர்கள் எழுப்பிய கேள்வி மிக நுட்பமானது. முதலில் மாணவர்களுக்கு தனது பாராட்டுகளைத் தெரிவித்து விட்டு பேசலானார் தமிழ்மணி. காடு என்பது வெளிப்பார்வைக்கு சிக்கலானதாக தெரிந்தாலும் உண்மையில் காடு என்பது தன் எல்லைக்குள் உட்பட்ட அனைத்தையும் தன் நெஞ்சில் வைத்து பாதுகாத்து வளர்த்து வாழ வைக்கிறது. காட்டில் காணப்படும் பலவகை தாவரங்கள், விலங்குகள், பறவைகள் மற்றும் நுண்ணுயிர்கள் எல்லாம் ஒன்றை அழித்து

ஒன்று வாழும் குணஒழுக்கம் கொண்டவை அல்ல என்பதே. என்ன நான் சொல்வது மிக ஆச்சரியமாக இருக்கிறதா! என்ற கேள்வியோடு மேலும் பதிலைத்தொடர்ந்தார். காட்டில் வாழும் ஒவ்வொரு இனத்திற்கும் அதற்கே உரிய சொந்தமான வாழிடம் மெல்ல மெல்ல உருவாகி விடுகிறது. மற்ற இனங்களோடு இணைந்து படர்ந்து நெருங்க வாழ்ந்தாலும் அதனதன் உரிமைப் பகுதியில் அத்து மீறுவதோ தலையிடுவதோ கிடையாது. ஒரே வார்த்தையில் சொல்ல வேண்டுமென்றால், அது ஊடும் பாவும்போன்றது என்ற வாசகமே மிக பொருத்தமாக வருகிறது. இன்னும் சொல்லப்போனால், இந்த ஊடும் பாவும் உறவும்கூட தொடர்ந்து இயங்குகையில் மாற்றத்திற்குள்ளாகி தன்னை மேலும் புதுப்பித்துக்கொண்டு மேலும் மேலும் தன்னை தகவமைத்துக் கொண்டு ஒரு உயிர்க் கூட்டமாக

செழித்து வளர்கிறது

உங்களின் விளக்கம் உயிரோட்டமாக அற்புதமாக இருக்கிறது. ஏதேனும் ஒரு உதாரணம் மூலம் மேலும் இதை விளக்க முடியுமா? என ஆசிரியர் ஆவலோடு கேட்டார். காட்டைப் பற்றி இன்னும் நாம் தெளிவாக புரிந்துகொள்ள வேண்டுமென்றால் பறவைகள், மிருகங்கள் மற்றும் பூச்சியினங்களின் உணவு உண்ணும் வழக்க நெறிகளை முதலில் தெரிந்து கொள்ள வேண்டும். அதாவது காட்டின் தரைப்பகுதியானது மக்கிய இலைகளால் எருவாக மாறும் போது அதனிடத்தில் புழு பூச்சிகள் அதிகம் உருவாகும். அந்த புழு பூச்சிகளை மட்டுமே உண்டு வாழும் பறவைகள் உண்டு. (காடை கவுதாரி போன்ற தரை வாழ் பறவையினங்கள்) அதேபோல் மரத்தின் இடைமட்டப் பகுதியில் உருவாகும் மரப்பொந்துகள், மரப்பட்டைகளின் இடுக்குகளில் உள்ள புழு

பூச்சிகளை மட்டுமே உணவாகக் கொண்டு வாழும் பறவைகள் உண்டு. (மரம்கொத்தி, கொட்டைக்கொத்தி போன்றவை). சில பறவைகள் மரத்தின் தலை மட்டத்தில் அதாவது உச்சானிக்கொம்பில் கூடமைத்து அங்குகிடைக்கும் புழு பூச்சிகள் மற்றும் பழங்களை மட்டுமே உண்டு வாழும் பறவைகள் உண்டு (தூக்கணாங்குருவிகள், இலை நார்களை வைத்து கூடுகட்டும் பறவைகள்). எனவே இப்பறவைகள் ஒன்றுக்கொன்று பகையாகாமல் அதனதன் வாழ்வுரிமையில் குறுக்கிடாமல் தனக்கான இரையைத்தேடி தின்று வாழ்கின்றன.

இது ஒரு உதாரணம்தான். இன்னும் ஆய்வுசெய்தால் பல ஆச்சரியங்கள், உண்மைகள் வெளிவரலாம். இதுதான் காட்டின் உயர்ந்த பண்பு. இப்ப சொல்லுங்கள் காடு ஒழுங்கற்றதா?. காடுகள் நமக்கே பாடம் நடத்துகிறது. ஆனால்

நமக்குத்தான் அது புரிவதில்லை. அதனால் தான் காடுகளை அழிக்க மனம் வருகிறது. காடு என்பது மரங்களின் வெறும் கூட்டமல்ல. அது உயிர்களின் பெரும் கூட்டம். அவ்வுயிர்களின் வாழ்க்கையை நாம் பாதுகாத்தால் அது நமது வாழ்க்கையைப் பாதுகாக்கும். காட்டின் உயிர் சுழற்சிகள் நாம் தலையிட முடியாது. அதன் உயிர் சங்கிலி ஒவ்வொன்றுக்கும் ஒரு கதை உண்டு. ஒரு பிணைப்பு உண்டு. ஒரு இணக்கம் உண்டு. காட்டிற்கு இணை ஏதும் இல்லை என தமிழ்மணி நீண்ட விளக்கம் தந்தபோது, அவரின் சுற்றுச்சூழல் ஆர்வம் ஆசிரியருக்கு பிடிபட்டது. காடென்பது ஒரு உயிர் ஜீவன். அதன் ஒரு சிறு பகுதியை அழித்தாலும், அது நமக்கு நாமே ஏற்படுத்திக் கொள்ளும் அழிவு என்பது மட்டும் தெளிவாக விளங்கியது. காட்டைப் பாதுகாத்தே ஆக வேண்டும். நம்மால் முடிந்த அளவிற்கு சிறு

காடுகளை மரம் தங்கசாமி போல நாம் உருவாக்க வேண்டும் என்ற எண்ணம் ஆசிரியர் மனதில் வலிமையாக எழுந்தது. மாணவர்களுக்கு இதை எளிதாக உணர வைக்கமுடியும் என்ற நம்பிக்கை உங்களால் எனக்கு உண்டானது என தமிழ்மணிக்கு நன்றி சொன்னார் ஆசிரியர். உங்கள் சுற்றுச்சூழல் பாதுகாப்பு இயக்கத்திற்கு எனது ஆதரவு எப்பொழுதும் உண்டு என ஆசிரியர் அவரிடம் கூறி விடைபெற்றார்.

# 21. யானை புகுந்த வகுப்பு

-பிப்ரவரி 23, 2020

பிரவீன் காலையில் பள்ளிக் கூடத்துக்குப் புறப்பட்டான். வீட்டை விட்டு வெளியே வந்தபோது டிங் டாங் என்று மணி யோசை கேட்டது. பார்த்தால் ஒரு குட்டியானை போய்க் கொண்டி ருந்தது. பிரவீனுக்கு ஆச்சரியமாக இருந்தது. அப்படியே வைத்த கண்ணை எடுக்காமல் பார்த்துக் கொண்டிருந்தான். குட்டி யானை.. பார்க்கவே அவ்வளவு அழகு! குட்டியானையின் முதுகில் அலங்காரத்தையல் விளிம்பிட்ட சிவப்பு நிறத்துணி போடப்பட்டிருந்தது. அதன்மேல் ஒரு சங்கிலி முதுகில் குறுக்கே போடப்பட்டிருந்தது. அந்தச் சங்கிலியின் இரண்டு முனைகளிலும் இரண்டு

மணிகள் தொங்கின. குட்டியானை அசைந்து அசைந்து நடக்கும்போது டிங் டாங் என்று ஒலி எழுப்பின. குட்டியானையின் கழுத்துக்கு அருகில் பாகன் உட்கார்ந்திருந்தான். அவன் தன்னுடைய கால்களை குட்டியானையின் கழுத்தில் கட்டப்பட்டிருந்த கயிற்றுக்குள் நுழைத்திருந்தான். அவன் கையில் ஒரு அங்குசம் இருந்தது. கொஞ்ச நேரம்கூட சும்மா இருக்கவில்லை குட்டியானை. ஆடியது. தும்பிக்கையைச் சுழற்றியது. தூக்கியது. ஒரு காலைத் தூக்கியது. முன்னும் பின்னும் கால்களை வைத்து அசைந்தது. பிரவீனை அப்படியே வசீகரித்து விட்டது குட்டியானை. அப்படியே பின்னால் போனான். யானை நகைக்கடை தெரு, அங்காடித்தெரு, காந்தி தெரு, நேரு நகர் என்று போய்க் கொண்டேயிருந்தது. நேரு நகர் தாண்டும்போது தான் திடுக்கிட்டான். பிரவீனுக்குத் திடீரென பள்ளிக்கூடத்துக்கு

நேரமாகி விட்டதே என்ற நினைவு வந்தது. அவ்வளவு தான் திடு திடுவென ஓடினான். பள்ளிக்கூடத்துக்குப் போய்ச் சேர்ந்தபோது பள்ளியில் பிரார்த்தனை நேரம் முடிந்து விட்டது.

அவனுக்கு பயம் வந்து உடல் நடுங்கத்தொடங்கியது. ஐந்தாவது வகுப்பு ஆ பிரிவு வாசலில் நின்று கொண்டிருந்தான். வகுப்பாசிரியர் அவனைப் பார்த்தார். “ஏண்டா லேட்டு?” அவன் பதில் சொல்லவில்லை. அப்படியே நின்றான். மறுபடியும் ஆசிரியர், “சொல்லுடா ஏண்டா லேட்டு?” “ஐயா.. யானை..” “என்னது யானையா?” என்று சொல்லிக்கொண்டே அவன் அருகில் வந்தார். ஐந்தாம் வகுப்பு ஆ பிரிவு வாசலில் ஒரு குட்டியானை நின்று கொண்டிருந்தது. அந்தக் குட்டியானை தன்னுடைய தலையை அங்கும் இங்கும் ஆட்டியது. தும்பிக்கையினால் தரையைத் துழாவியது. தும்பிக்கையைத் தூக்கி

காற்றை முகர்ந்தது. விசிறியைப் போன்ற தன்னுடைய பெரிய காதுகளை ஆட்டியது. வாயை அசை போட்டது. வகுப்பாசிரியர் சற்று பின்னால் போனார். உடனே குட்டியானை வகுப்புக்குள் நுழைந்து விட்டது. மாணவர்கள் எல்லோரும் ஓ வென்று மகிழ்ச்சியில் சத்தம் போட்டனர். தும்பிக்கை நுனியினால் சிறிய சாக்பீசை எடுத்து கரும்பலகையில் குட்டியானை என்று எழுதியது. மேஜை மேலிருந்த பிரம்பை எடுத்து கீழே போட்டு மிதித்தது. பின்னர் மெல்ல ஆடி அசைந்து வகுப்பறையைச் சுற்றி வந்தது. அப்படி அதுவரும்போது டிங் டாங் டிங் டாங் டிங் டாங் என்று சத்தம் கேட்டது. கடைசி வரிசை பெஞ்சில் உட்கார்ந்திருந்த கார்த்திக்கின் புத்தகத்தை எடுத்து வாசிப்பது போல நடித்தது. வாசித்ததை பிளிறிக் காட்டியது. அப்படியே ஒவ்வொரு பையனின் தலையிலும் தும்பிக்கையை வைத்துத் தடவியது.

அப்போது ஒரு பையன் குட்டியானைக்கு ஒரு சாக்லேட் கொடுத்தான். சாக்லேட்டின் பேப்பரைப் பிரித்து வாயில் போட்டது. மகிழ்ச்சியில் துள்ளிக்குதித்த குட்டியானை வகுப்பறையே அதிரும்படி குரல் கொடுத்தது. அந்த நிமிடம் வகுப்பறையே காடாக மாறிவிட்டது. குட்டியானை மரங்களிலிருந்து இலைகளை பறித்துத் தின்றது. பழங்களைத் தின்றது. தென்னை மரத்திலிருந்து பச்சை ஓலைகளை தின்றது. கரும்புத்துண்டுகளைச் சாறு வழிய வழியச் சாப்பிட்டது. ஓடையில் ஓடிக்கொண்டிருந்த தண்ணீரைத் தும்பிக்கையினால் சத்தமாக உறிஞ்சி வாய்க்குள் விட்டது. தும்பிக்கையினால் தண்ணீரை மழைத்துளிகளாக விசிறியது. கீழே விழுந்து புரண்டது. மண்ணை அள்ளி முதுகில் போட்டுக் கொண்டது. அப்புறம் பெஞ்சுகளின் இடையில் ஓடியது. மாணவர்களை முதுகில்

சுமந்து கொண்டு நடந்தது. குட்டியானையின் கண்களில் மகிழ்ச்சி பொங்கியது. மாணவர்கள் எல்லோரும் அந்தக் குட்டியானையின் பின்னால் அதன் வாலைப்பிடித்துக் கொண்டே ஓடினார்கள். கடைசியில் வகுப்பாசிரியரும் ஓடினார். குட்டியானையின் ஒவ்வொரு சேட்டைக்கும் எல்லோரும் சிரித்தனர். அப்போது ஒரு பையன் யானையிடம் ஐந்து ரூபாய் நாணயத்தை நீட்டினான். யானை அப்படியே நின்றது. அதன் முகத்திலிருந்த மகிழ்ச்சி மறைந்தது. கண்களில் கண்ணீர் வழிந்தது. “என்னைய பிச்சை எடுக்க வைக்காதீங்க..” என்று உரத்தகுரலில் பிளிறியது. பின்னர் அப்படியே அமைதியாக பெஞ்சில் போய் உட்கார்ந்து கொண்டது. வகுப்பாசிரியர் அருகில் வந்து யானையின் தலையைத் தடவிக்கொடுத்தார். பிரவீன் மெல்லத்தலை தூக்கிச் சிரித்தான்.

**மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்:**

மின்புத்தகங்களைப் படிப்பதற்கென்றே கையிலேயே வைத்துக் கொள்ளக்கூடிய பல கருவிகள் தற்போது சந்தையில் வந்துவிட்டன. Kindle, Nook, Android Tablets போன்றவை இவற்றில் பெரும்பங்கு வகிக்கின்றன. இத்தகைய கருவிகளின் மதிப்பு தற்போது 4000 முதல் 6000 ரூபாய் வரை குறைந்துள்ளன. எனவே பெரும்பான்மையான மக்கள் தற்போது இதனை வாங்கி வருகின்றனர்.

**ஆங்கிலத்திலுள்ள மின்புத்தகங்கள்:**

ஆங்கிலத்தில் லட்சக்கணக்கான மின்புத்தகங்கள் தற்போது கிடைக்கப் பெறுகின்றன. அவை PDF, EPUB, MOBI, AZW3.

போன்ற வடிவங்களில் இருப்பதால், அவற்றை மேற்கூறிய கருவிகளைக் கொண்டு நாம் படித்துவிடலாம்.

**தமிழிலுள்ள மின்புத்தகங்கள்:**

தமிழில் சமீபத்திய புத்தகங்களெல்லாம் நமக்கு மின்புத்தகங்களாக கிடைக்கப்பெறுவதில்லை. ProjectMadurai.com எனும் குழு தமிழில் மின்புத்தகங்களை வெளியிடுவதற்கான ஓர் உன்னத சேவையில் ஈடுபட்டுள்ளது. இந்தக் குழு இதுவரை வழங்கியுள்ள தமிழ் மின்புத்தகங்கள் அனைத்தும் PublicDomain-ல் உள்ளன. ஆனால் இவை மிகவும் பழைய புத்தகங்கள்.

சமீபத்திய புத்தகங்கள் ஏதும் இங்கு கிடைக்கப்பெறுவதில்லை.

**சமீபத்திய புத்தகங்களை தமிழில் பெறுவது எப்படி?**

அமேசான் கிண்டில் கருவியில் தமிழ் ஆதரவு தந்த பிறகு, தமிழ் மின்னூல்கள் அங்கே விற்பனைக்குக் கிடைக்கின்றன. ஆனால் அவற்றை நாம் பதிவிறக்க இயலாது. வேறு யாருக்கும் பகிர இயலாது.

சமீபகாலமாக பல்வேறு எழுத்தாளர்களும், பதிவர்களும், சமீபத்திய நிகழ்வுகளைப் பற்றிய விவரங்களைத் தமிழில் எழுதத் தொடங்கியுள்ளனர். அவை இலக்கியம், விளையாட்டு, கலாச்சாரம், உணவு, சினிமா, அரசியல், புகைப்படக்கலை, வணிகம் மற்றும் தகவல் தொழில்நுட்பம் போன்ற பல்வேறு தலைப்புகளின் கீழ் அமைகின்றன.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து தமிழ் மின்புத்தகங்களை உருவாக்க உள்ளோம்.

அவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள்

Creative Commons எனும் உரிமத்தின் கீழ் வெளியிடப்படும். இவ்வாறு வெளியிடுவதன் மூலம் அந்தப் புத்தகத்தை எழுதிய மூல ஆசிரியருக்கான உரிமைகள் சட்டரீதியாகப் பாதுகாக்கப்படுகின்றன. அதே நேரத்தில் அந்த மின்புத்தகங்களை யார் வேண்டுமானாலும், யாருக்கு வேண்டுமானாலும், இலவசமாக வழங்கலாம்.

எனவே தமிழ் படிக்கும் வாசகர்கள் ஆயிரக்கணக்கில் சமீபத்திய தமிழ் மின்புத்தகங்களை இலவசமாகவே பெற்றுக் கொள்ள முடியும்.

**தமிழிலிருக்கும் எந்த வலைப்பதிவிலிருந்து வேண்டுமானாலும் பதிவுகளை எடுக்கலாமா?**

கூடாது.

ஒவ்வொரு வலைப்பதிவும் அதற்கென்றே

ஒருசில அனுமதிகளைப் பெற்றிருக்கும். ஒரு வலைப்பதிவின் ஆசிரியர் அவரது பதிப்புகளை "யார் வேண்டுமானாலும் பயன்படுத்தலாம்" என்று குறிப்பிட்டிருந்தால் மட்டுமே அதனை நாம் பயன்படுத்த முடியும்.

அதாவது "Creative Commons" எனும் உரிமத்தின் கீழ் வரும் பதிப்புகளை மட்டுமே நாம் பயன்படுத்த முடியும்.

அப்படி இல்லாமல் "All Rights Reserved" எனும் உரிமத்தின் கீழ் இருக்கும் பதிப்புகளை நம்மால் பயன்படுத்த முடியாது.

வேண்டுமானால் "All Rights Reserved" என்று விளங்கும் வலைப்பதிவுகளைக் கொண்டிருக்கும் ஆசிரியருக்கு அவரது பதிப்புகளை "Creative Commons" உரிமத்தின் கீழ் வெளியிடக்கோரி நாம் நமது வேண்டுகோளைத் தெரிவிக்கலாம். மேலும்

அவரது படைப்புகள் அனைத்தும் அவருடைய பெயரின் கீழே தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் நாம் அளிக்க வேண்டும்.

பொதுவாக புதுப்புது பதிவுகளை உருவாக்குவோருக்கு அவர்களது பதிவுகள் நிறைய வாசகர்களைச் சென்றடைய வேண்டும் என்ற எண்ணம் இருக்கும். நாம் அவர்களது படைப்புகளை எடுத்து இலவச மின்புத்தகங்களாக வழங்குவதற்கு நமக்கு அவர்கள் அனுமதியளித்தால், உண்மையாகவே அவர்களது படைப்புகள் பெரும்பான்மையான மக்களைச் சென்றடையும். வாசகர்களுக்கும் நிறைய புத்தகங்கள் படிப்பதற்குக் கிடைக்கும்

வாசகர்கள் ஆசிரியர்களின் வலைப்பதிவு முகவரிகளில் கூட அவர்களுடைய படைப்புகளை தேடிக் கண்டுபிடித்து படிக்கலாம். ஆனால் நாங்கள்

வாசகர்களின் சிரமத்தைக் குறைக்கும் வண்ணம் ஆசிரியர்களின் சிதறிய வலைப்பதிவுகளை ஒன்றாக இணைத்து ஒரு முழு மின்புத்தகங்களாக உருவாக்கும் வேலையைச் செய்கிறோம். மேலும் அவ்வாறு உருவாக்கப்பட்ட புத்தகங்களை "மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்"-க்கு ஏற்ற வண்ணம் வடிவமைக்கும் வேலையையும் செய்கிறோம்.

**FREETAMILEBOOKS.COM**

இந்த வலைத்தளத்தில்தான் பின்வரும் வடிவமைப்பில் மின்புத்தகங்கள் காணப்படும்.

PDF for desktop, PDF for 6" devices, EPUB, AZW3, ODT

இந்த வலைதளத்திலிருந்து யார் வேண்டுமானாலும் மின்புத்தகங்களை இலவசமாகப் பதிவிறக்கம்(download) செய்து

கொள்ளலாம்.

அவ்வாறு பதிவிறக்கம்(download) செய்யப்பட்ட புத்தகங்களை யாருக்கு வேண்டுமானாலும் இலவசமாக வழங்கலாம்.

இதில் நீங்கள் பங்களிக்க விரும்புகிறீர்களா?

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் தமிழில் எழுதப்பட்டிருக்கும் வலைப்பதிவுகளிலிருந்து பதிவுகளை
எடுத்து, அவற்றை LibreOffice/MS Office போன்ற wordprocessor-ல் போட்டு ஓர் எளிய மின்புத்தகமாக மாற்றி எங்களுக்கு அனுப்பவும்.

அவ்வளவுதான்!

**மேலும் சில பங்களிப்புகள் பின்வருமாறு:**

1. ஒருசில பதிவர்கள்/எழுத்தாளர்களுக்கு அவர்களது படைப்புகளை "Creative Com-

mons” உரிமத்தின்கீழ் வெளியிடக்கோரி மின்னஞ்சல் அனுப்புதல்

2. தன்னார்வலர்களால் அனுப்பப்பட்ட மின்புத்தகங்களின் உரிமைகளையும் தரத்தையும் பரிசோதித்தல்
3. சோதனைகள் முடிந்து அனுமதி வழங்கப்பட்ட தரமான மின்புத்தகங்களை நமது வலைதளத்தில் பதிவேற்றம் செய்தல்

விருப்பமுள்ளவர்கள் freetamilebook-steam@gmail.com எனும் முகவரிக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

**இந்தத் திட்டத்தின் மூலம் பணம் சம்பாதிப்பவர்கள் யார்?**

யாருமில்லை.

இந்த வலைத்தளம் முழுக்க முழுக்க

தன்னார்வலர்களால் செயல்படுகின்ற ஒரு வலைத்தளம் ஆகும். இதன் ஒரே நோக்கம் என்னவெனில் தமிழில் நிறைய மின்புத்தகங்களை உருவாக்குவதும், அவற்றை இலவசமாக பயனர்களுக்கு வழங்குவதுமே ஆகும்.

மேலும் இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள், ebook reader ஏற்றுக்கொள்ளும் வடிவமைப்பில் அமையும்.

**இத்திட்டத்தால் பதிப்புகளை எழுதிக்கொடுக்கும் ஆசிரியர்/பதிவருக்கு என்ன லாபம்?**

ஆசிரியர்/பதிவர்கள் இத்திட்டத்தின் மூலம் எந்தவிதமான தொகையும் பெறப்போவதில்லை. ஏனெனில், அவர்கள் புதிதாக இதற்கென்று எந்தஒரு பதிவையும் எழுதித்தரப்போவதில்லை.

ஏற்கனவே அவர்கள் எழுதி வெளியிட்டிருக்கும்

பதிவுகளை எடுத்துத்தான் நாம் மின்புத்தகமாக வெளியிடப்போகிறோம்.

அதாவது அவரவர்களின் வலைதளத்தில் இந்தப் பதிவுகள் அனைத்தும் இலவசமாகவே கிடைக்கப்பெற்றாலும், அவற்றையெல்லாம் ஒன்றாகத் தொகுத்து ebook reader போன்ற கருவிகளில் படிக்கும் விதத்தில் மாற்றித் தரும் வேலையை இந்தத் திட்டம் செய்கிறது.

தற்போது மக்கள் பெரிய அளவில் tablets மற்றும் ebook readers போன்ற கருவிகளை நாடிச் செல்வதால் அவர்களை நெருங்குவதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பாக அமையும்.

**நகல் எடுப்பதை அனுமதிக்கும் வலைதளங்கள் ஏதேனும் தமிழில் உள்ளதா?**

உள்ளது.

பின்வரும் தமிழில் உள்ள வலைதளங்கள் நகல் எடுப்பதினை அனுமதிக்கின்றன.

1. http://www.vinavu.com
2. http://www.badriseshadri.in
3. http://maattru.com
4. http://kaniyam.com
5. http://blog.ravidreams.net

**எவ்வாறு ஓர் எழுத்தாளரிடம் CREATIVE COMMONS உரிமத்தின் கீழ் அவரது படைப்புகளை வெளியிடுமாறு கூறுவது?**

இதற்கு பின்வருமாறு ஒரு மின்னஞ்சலை அனுப்ப வேண்டும்.

<துவக்கம்>

உங்களது வலைத்தளம் அருமை

[வலைதளத்தின் பெயர்].

தற்போது படிப்பதற்கு உபயோகப்படும் கருவிகளாக Mobiles மற்றும் பல்வேறு கையிருப்புக் கருவிகளின் எண்ணிக்கை அதிகரித்து வந்துள்ளது.

இந்நிலையில் நாங்கள் http://www.FreeTamilEbooks.com எனும் வலைதளத்தில், பல்வேறு தமிழ் மின்புத்தகங்களை வெவ்வேறு துறைகளின் கீழ் சேகரிப்பதற்கான ஒரு புதிய திட்டத்தில் ஈடுபட்டுள்ளோம்.

இங்கு சேகரிக்கப்படும் மின்புத்தகங்கள் பல்வேறு கணிணிக் கருவிகளான Desktop,ebook readers like kindl, nook, mobiles, tablets with android, iOS போன்றவற்றில் படிக்கும் வண்ணம் அமையும். அதாவது இத்தகைய கருவிகள் support செய்யும் odt, pdf, ebub, azw போன்ற வடிவமைப்பில் புத்தகங்கள்

அமையும்.

இதற்காக நாங்கள் உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பெற விரும்புகிறோம். இதன் மூலம் உங்களது பதிவுகள் உலகளவில் இருக்கும் வாசகர்களின் கருவிகளை நேரடியாகச் சென்றடையும்.

எனவே உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பிரதியெடுப்பதற்கும் அவற்றை மின்புத்தகங்களாக மாற்றுவதற்கும் உங்களது அனுமதியை வேண்டுகிறோம்.

இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்களில் கண்டிப்பாக ஆசிரியராக உங்களின் பெயரும் மற்றும் உங்களது வலைதள முகவரியும் இடம்பெறும். மேலும் இவை “Creative Commons” உரிமத்தின் கீழ் மட்டும்தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் அளிக்கிறோம்.

http://creativecommons.org/licenses/

நீங்கள் எங்களை பின்வரும் முகவரிகளில் தொடர்பு கொள்ளலாம்.

e-mail : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM

FB : https://www.facebook.com/FreeTamilEbooks

G plus: https://plus.google.com/communities/108817760492177970948

நன்றி.

</முடிவு>

மேற்கூறியவாறு ஒரு மின்னஞ்சலை உங்களுக்குத் தெரிந்த அனைத்து எழுத்தாளர்களுக்கும் அனுப்பி அவர்களிடமிருந்து அனுமதியைப் பெறுங்கள்.

முடிந்தால் அவர்களையும் “Creative Commons License”-ஐ அவர்களுடைய வலைதளத்தில் பயன்படுத்தச் சொல்லுங்கள்.

கடைசியாக அவர்கள் உங்களுக்கு அனுமதி அளித்து அனுப்பியிருக்கும் மின்னஞ்சலைFREETAMILEBOOKSTEAM@GMAIL.COM எனும் முகவரிக்கு அனுப்பி வையுங்கள்.

**ஓர் எழுத்தாளர் உங்களது உங்களது வேண்டுகோளை மறுக்கும் பட்சத்தில் என்ன செய்வது?**

அவர்களையும் அவர்களது படைப்புகளையும் அப்படியே விட்டுவிட வேண்டும்.

ஒருசிலருக்கு அவர்களுடைய சொந்த முயற்சியில் மின்புத்தகம் தயாரிக்கும் எண்ணம்கூட இருக்கும். ஆகவே அவர்களை நாம் மீண்டும் மீண்டும் தொந்தரவு செய்யக் கூடாது.

அவர்களை அப்படியே விட்டுவிட்டு அடுத்தடுத்த எழுத்தாளர்களை நோக்கி நமது முயற்சியைத் தொடர வேண்டும்.

## மின்புத்தகங்கள் எவ்வாறு அமைய வேண்டும்?

ஒவ்வொருவரது வலைத்தளத்திலும் குறைந்தபட்சம் நூற்றுக்கணக்கில் பதிவுகள் காணப்படும். அவை வகைப்படுத்தப்பட்டோ அல்லது வகைப்படுத்தப் படாமலோ இருக்கும்.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகத் திரட்டி ஒரு பொதுவான தலைப்பின்கீழ் வகைப்படுத்தி மின்புத்தகங்களாகத் தயாரிக்கலாம். அவ்வாறு வகைப்படுத்தப்படும் மின்புத்தகங்களை பகுதி-I பகுதி-II என்றும் கூட தனித்தனியே பிரித்துக் கொடுக்கலாம்.

## தவிர்க்க வேண்டியவைகள் யாவை?

இனம், பாலியல் மற்றும் வன்முறை போன்றவற்றைத் தூண்டும் வகையான பதிவுகள் தவிர்க்கப்பட வேண்டும்.

## எங்களைத் தொடர்பு கொள்வது எப்படி?

நீங்கள் பின்வரும் முகவரிகளில் எங்களைத் தொடர்பு கொள்ளலாம்.

- EMAIL : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM
- Facebook: https://www.facebook.com/FreeTamilEbooks
- Google Plus: https://plus.google.com/communities/108817760492177970948

## இத்திட்டத்தில் ஈடுபட்டுள்ளவர்கள் யார்?

குழு – http://freetamilebooks.com/meet-the-team/




**தொலை நோக்கு – Vision**

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழல்

**பணி இலக்கு – Mission**

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

## தற்போதைய செயல்கள்

- கணியம் மின்னிதழ் – http://kaniyam.com/
- கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இலவச தமிழ் மின்னூல்கள் – http://FreeTamilEbooks.com

## கட்டற்ற மென்பொருட்கள்

- உரை ஒலி மாற்றி – Text to Speech

- எழுத்துணரி – Optical Character Recognition
- விக்கிமூலத்துக்கான எழுத்துணரி
- மின்னூல்கள் கிண்டில் கருவிக்கு அனுப்புதல் – Send2Kindle
- விக்கிப்பீடியாவிற்கான சிறு கருவிகள்
- மின்னூல்கள் உருவாக்கும் கருவி
- உரை ஒலி மாற்றி – இணைய செயலி
- சங்க இலக்கியம் – ஆன்டிராய்டு செயலி
- FreeTamilEbooks – ஆன்டிராய்டு செயலி
- FreeTamilEbooks – ஐஒஎஸ் செயலி
- WikisourceEbooksReportஇந்திய மொழிகளுக்ககான விக்கிமூலம் மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்

- FreeTamilEbooks.com – Download counter மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்

## அடுத்த திட்டங்கள்/மென்பொருட்கள்

- விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்
- முழு நேர நிரலரை பணியமர்த்தி பல்வேறு கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்குதல்
- தமிழ் NLP க்கான பயிற்சிப் பட்டறைகள் நடத்துதல்
- கணியம் வாசகர் வட்டம் உருவாக்குதல்
- கட்டற்ற மென்பொருட்கள், கிரியேட்டிவ்

காமன்சு உரிமையில் வளங்களை உருவாக்குபவர்களைக் கண்டறிந்து ஊக்குவித்தல்

- கணியம் இதழில் அதிக பங்களிப்பாளர்களை உருவாக்குதல், பயிற்சி அளித்தல்
- மின்னூலாக்கத்துக்கு ஒரு இணையதள செயலி
- எழுத்துணரிக்கு ஒரு இணையதள செயலி
- தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்
- http://OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்
- தமிழ்நாடு முழுவதையும் http://OpenStreetMap.org ல் வரைதல்
- குழந்தைக் கதைகளை ஒலி வடிவில்

வழங்குதல்

- http://Ta.wiktionary.org ஐ ஒழுங்குபடுத்தி API க்கு தோதாக மாற்றுதல்
- http://Ta.wiktionary.org க்காக ஒலிப்பதிவு செய்யும் செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுத்துப் பிழைத்திருத்தி உருவாக்குதல்
- தமிழ் வேர்ச்சொல் காணும் கருவி உருவாக்குதல்
- எல்லா http://FreeTamilEbooks.com மின்னூல்களையும் Google Play Books, GoodReads.com ல் ஏற்றுதல்
- தமிழ் தட்டச்சு கற்க இணைய செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுதவும் படிக்கவும் கற்ற இணைய செயலி உருவாக்குதல் ( aamozish.com/Course_-

preface போல)

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**வெளிப்படைத்தன்மை**

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், 100% வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும்.இந்த இணைப்பில் செயல்களையும், இந்த இணைப்பில்

மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், GNU GPL, Apache, BSD, MIT, Mozilla ஆகிய உரிமைகளில் ஒன்றாக வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள் யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

# நன்கொடை

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உடனே விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**Kaniyam Foundation**

**Account Number : 606 1010 100 502 79**

**Union Bank Of India**

**West Tambaram, Chennai**

**IFSC – UBIN0560618**




BHIM UPI Payments Accepted at

**Kaniyam Foundation**



**Account Number : 606101010050279, IFSC Code: UBIN0560618**

Scan and Pay using any UPI supported Apps

குறிப்பு: சில UPI செயலிகளில் இந்த QR Code வேலை செய்யாமல் போகலாம். அச்சமயம் மேலே உள்ள வங்கிக் கணக்கு எண், IFSC code ஐ பயன்படுத்தவும்.

Note: Sometimes UPI does not work properly, in that case kindly use Account number and IFSC code for internet banking.